# தேர்தல் தகிடுதத்தங்கள்




நமது தேர்தல் முறையின் மிகப் பெரிய குறைபாடு என்னவென்றால், குறைந்தபட்ச வோட்டுக்களைப் பெற்ற ஒரு கட்சி சட்டமன்றத்திலோ நாடாளுமன்றத்திலோ அதிக பட்ச இடங்களைக் கைப்பற்றி ஆட்சிக்கு வர முடிவதுதான். மத்தியிலே காங்கிரஸ் ஆட்சியின் சரித்திரத்தை எடுத்துப் பார்த்தால் ஒவ்வொரு முறையும் அதிகபட்ச மக்கள் காங்கிரஸுக்கு எதிராகத்தான் வோட்டு அளித்திருக்கிறார்கள் என்பதும் ஆனால் அந்த வோட்டு எதிர்க் கட்சியினரிடையே சிதறிப் போவதால் மீண்டும் மீண்டும் காங்கிரஸே பதவிக்கு வரமுடிகிறது என்பதையும் காணலாம்.

இது காங்கிரஸுக்கு எதிரான பிரசாரமாக இங்கு எடுத்துக் கூறப்படவில்லை. தேர்தல் முறையில் உள்ள ஒரு குறைபாட்டை விளக்கவே சொல்லப்பட்டது. ஆனால் இதே தேர்தல் முறைதானே அமெரிக்காவில், பிரிட்டனில் இருக்கிறது என்றால் அங்கே இருப்பன இரண்டே பிரதான கட்சிகள் தான் என்பதைக் கவனிக்க வேண்டும்.

அதனால் அங்கேயெல்லாம் நம் நாட்டில் காணப்படுவது போன்ற ஒரு முரண்பாடு உருவாக வாய்ப்பில்லை.

இதற்கு மாற்று வழி உண்டு. அந்த மாற்று வழிகள் மேல் நாடுகளில் பல ஜனநாயக நாடுகளில் வெற்றிகரமாகக் கையாளப்படுகின்றன. ஆனால் அந்த மாற்று வழிகள் சிக்கலானவை. இரண்டாவது வோட்டு ஒன்றை மக்களுக்கு வழங்குவது ஒரு வகை. இன்னொரு தேர்தல் முறையில் முதல் வோட்டு இவருக்கு; இரண்டாம் பட்ச வோட்டு இன்னொருக்கு என்று வேட்பாளர்களை வரிசைப்படுத்திக் குறிக்குமாறு வாக்காளர் கேட்டுக் கொள்ளப்படுகிறார்.

ஆனால் இவை போன்ற வாக்களிக்கும் முறைகள் படிப்பறிவு அதிகமில்லாத நமது பாமர மக்களைக் குழப்பத்தில் ஆழ்த்துவதுடன், தவறான விதத்தில் வாக்குகளை வழங்கச் செய்யும். மேலும் இந்த முறைகளும் நூற்றுக்கு நூறு பழுதற்றவை என்பதாகவும் கூறிவிட முடியாது. எனவே நமது வாக்காளருக்கு அதிக சிரமம் அல்லது குழப்பம் இல்லாத விதமாகத் தேர்தல் முறையை மாற்றுவதுதான் சரி.

இதனால்தான் நமது ஜனாதிபதி ஆர். வெங்கடராமன், பல ஆண்டுகளுக்கு முன்பாகவே ஒரு கட்டுரையில், 'கட்சிகளின் எண்ணிக்கையைக் குறைக்க வழி கண்டுபிடித்தாக வேண்டும்' என்றார். தேசிய அளவில் வாக்காளர்களில் ஐந்து சதவித வோட்டுக்களைப் பெறாத எந்த ஒரு கட்சியும் அடுத்த தேர்தலில் பங்கேற்க அனுமதிக்கப்படக் கூடாது. இந்த வரம்பு அடுத்த தேர்தலில் பத்து சதம் என்று உயர்த்தப்படலாம். இவ்வாறு தேர்தலுக்குத் தேர்தல் செய்து வந்தால், உதிரிக் கட்சிகள் படிப்படியாக மறைவது மட்டுமல்ல; குறுகிய பிரதேசப் பித்து, பிரதேசக் கட்சி மனப்பான்மை ஆகியவை மறைந்து, தேசிய நோக்கும் தேசிய ஒருமைப்பாடும் வளரும். உதிரிக் கட்சிகள் படிப்படியாகத் தங்களுக்கு விருப்பமான பெரிய கட்சியுடன் இணையும். இறுதியில் இரண்டே கட்சிகள் இருக்கும் — ஆளும் கட்சி, எதிர்க்கட்சி என்று. அப்போதும் ஜனநாயகம் பலம் பெற்று நன்கு செயல்படுமே தவிர, நூற்றுக்கு நூறு சதம் பழுதில்லாமல், குறை கூறவே இடமில்லாமல் இருக்கும் என்று சொல்ல முடியாது.

இருந்தாலும் வேறு பல சீர்திருத்தங்களையும் செய்தால் 95 சதம் அல்லது 98 சதம் ஆரோக்கியமான ஜனநாயக முறையைப் பெற வாய்ப்பிருக்கிறது. அந்தச் சீர்திருத்தங்கள் என்ன என்பதைத் தெரிந்து கொள்ளுமுன்னர், இன்று என்ன என்ன தகிடுதத்தங்கள் நடக்கின்றன என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இவற்றை நீக்கு

வதே சீர்திருத்தங்கள்:

1. அதிகார துஷ்பிரயோகம்: இது பல விதங்களில் நடக்கிறது. ஆட்சியில் உள்ள அரசு தேர்தல் அறிவிக்கப்பட்டதும் தனது கட்சிக்கு ஆதரவு தேடுகிற முறையில் சாதனை விளம்பரங்களைத் தருகிறது. இது அரசாங்கச் செலவில் கட்சிக்கு விளம்பரம் தேடுகிற அநீதி. சட்டப்படி இது சரி; ஆனால் தார்மீக ரீதியில் குற்றம். மேலும் ஆளும் கட்சி தனது ஆளுகைக்குக் கீழ் உள்ள ரேடியோ, டீவி ஆகியவற்றைப் பிரசார நோக்கில் பயன்படுத்திக் கொள்வது சாத்தியமாகிறது. அதிகாரிகளை ஆங்காங்கே அனுப்பி ஆளும் கட்சியே மீண்டும் பதவிக்கு வர ஏற்ற சூழ்நிலைகளை உருவாக்க முடிகிறது. அதிகாரிகள் மிரட்டியே காரியங்களைச் சாதிப்பார்கள். தவிர, போலீஸ் படை முற்றிலும் ஆட்சியில் உள்ளவருக்குக் கைகட்டிச் சேவகம் செய்யும் நிலையில் இருப்பதையும் ஆளும் கட்சி தனக்குச் சாதகமாக்கிக் கொள்கிறது. தொகுதிகளுக்கு நன்மை செய்கிறேன் என்று பணத்தை வாரி விட்டுத் தேர்தல் காலத்தில் அபிவிருத்திப் பணிகளைச் செய்து மக்களைக் கவர முடிகிறது. முதல்வர்கள், பிரதமர், அமைச்சர்கள் ஆகியோருக்கு ஓர் அவசரத்துக்குப் பயன்படுத்தப் படப் பணம் உண்டு. (Discretionary Funds) இதனைத் தேர்தல் சமயத்தில் வாரி விட்டு, மக்களை விலைக்கு வாங்க முடிகிறது. திரும்பினபக்கமெல்லாம் அபிவிருத்திப் பணிகளுக்கு அடிக்கல் நாட்டி மக்களை ஏமாற்றுவது சாத்தியமாகிறது. ஏராளமான வாக்குறுதிகளைக் கண்மண் தெரியாமல் வாரி வழங்க முடிகிறது. அரசாங்கத்தின் விமானம், ஹெலிகாப்டர் முதலியவற்றைப் பயன்படுத்த மந்திரிகளால்தான் முடியும். எதிர்க்கட்சியினருக்கு வாய்ப்பில்லை. இதற்காக அமைச்சர்கள் கட்சிக் கூட்டத்தோடு அரசுப் பணி ஒன்றையும் இணைத்துக் கொண்டு பயணப்படுகிறார்கள்! இது ஏமாற்று வேலையே. அரசாங்கப் பயணியர் விடுதிகள்; பங்களாக்கள் எல்லாம் அதிகாரத்தில் உள்ள கட்சியினருக்கு மட்டுமே கிடைக்கிறது. இப்படி எத்தனை எத்தனையோ.

2. பணபலம்: ஆட்சியில் உள்ள கட்சி, தேர்தலுக்குப் பணம் சேர்ப்பது மிகவும் எளிதாயிருக்கிறது. தொழிலதிபர்கள், வர்த்தகர்கள் இவர்களிடம் சலுகைகளை விநியோகித்து விட்டு அதற்குப் பிரதியாகக் கட்சிக்குப் பணம் பெற்றுக் கொள்கிறார்கள். தொழிலதிபர்கள் இதனைக் கறுப்புப் பணமாகக் கொடுக்கும் போது ஊர் ஊராகக் கூட்டம் போடும் அரசியல்வாதி, மக்கள் 'திரட்டி அளித்த' அல்லது 'அள்ளிக் கொடுத்த' நிதி என்று விளம்பரம் செய்து, அதைப் போட்டோ பிடித்து, வெளுப்பாக்கிக் கொள்கிறார். பணம் எந்தக் கட்சியிடம் அதிகமாக இருக்கிறதோ அந்தக் கட்சி (சரியான கொள்கைகள் இல்லாத போதிலும்) தேர்தலில் வெற்றி பெற முடிகிறது. பலவித விளம்பரங்கள் பண்ணவும், வோட்டுக்களை விலைக்கு வாங்கவும் பணம் பயன்படுகிறது. வாகனங்களை வாடகைக்கு எடுத்து மக்களை வோட்டுச் சாவடிக்கு ஏற்றி அழைத்துப் போக முடிகிறது. பொதுக் கூட்டங்களில் பணத்தைக் கொண்டு வாங்கப்பட்ட கூலிப் பட்டாளங்களை நிறுத்தி, 'பெரிய கூட்டம்' என்ற பிரமையை ஏற்படுத்த முடிகிறது. இவ்வாறு பணம் பாதாளம் வரை பாய்கிறது.



* கட்சிகளின் தேர்தல் செலவுகளை அரசாங்கமே ஏற்க வேண்டும்.

இந்தக் குறைபாடுகளையெல்லாம் வெற்றி கொள்ள வழிகள் இல்லாமல் போகவில்லை. வி. பி. சிங் அருமையான யோசனை தெரிவித்தார்: "கட்சிகள் பணம் திரட்டுவதை அடியோடு தடுக்கச் சட்டம் கொண்டு வருவோம்; தேர்தல் செலவுகளுக்கு அரசாங்கமே கட்சிகளுக்குப் பணம் தரலாம்; இதற்காக மது வகைகள் மீது ஒரு சிறிய வரி விதித்தாலும் போதும், தேவையான பணம் சேர்ந்து விடும்."

வி. பி. சிங்கின் இந்தக் கருத்து ஒன்றும் புதிதல்ல. தேர்தல் கமிஷனே 1982லேயே மத்திய அரசுக்கு இதனைச் சிபாரிசு செய்திருக்கிறது. ஆனால் சிபாரிசை ஏற்க மத்திய அரசுக்குத்தான் மனமில்லை!

இதே போல, 'எலெக்ட்ரானிக் வோட்டுப் பதியும் மிஷின்களை வோட்டுச் சாவடிகளில் பயன்படுத்தலாம்; அதனால் மோசடி வேலைகள் கணிசமாகக் குறையும்' என்று கர்நாடக மாநில முதல்வர் ஹெக்டே கூறினார். எதிர்க்கட்சிகள் எல்லாம் ஏற்றுக் கொண்டன. மத்திய அரசு இன்னும் சம்மதம் தெரிவிக்கவில்லை!

ஹெக்டே தலைமையில் கர்நாடக அரசு, தேர்தலில் நியாயம், நேர்மை வெல்ல



* ஆரம்ப சூரத்தனம்: இன்று மெத்தனம்.



* இயக்கத்தின் தலையாய கோரிக்கை தேர்தல் சீர்திருத்தமே....

வேண்டும் என்பதற்காக எடுத்துக் கொண்டுள்ளது போன்ற முயற்சிகளை வேறு எந்த மாநில அரசும் இதுவரை செய்ததில்லை. தேர்தல் சமயத்தில் அமைச்சர்களும் அதிகாரிகளும் எப்படி நடந்து கொள்ள வேண்டும், எவ்வாறெல்லாம் நடந்து கொள்ளக் கூடாது என்பதற்குக் கர்நாடக முதல்வர் அனைவருக்கும் சுற்றறிக்கையே அனுப்பியிருக்கிறார். இதை மீறுபவர்கள் முதல்வரின் அதிருப்திக்கு ஆளாவார்கள் என்பதைத் தெளிவுபடுத்தியிருக்கிறார். ஆனால் இதற்கு மேல் அதிகமாக ஏதும் அவரால் செய்ய முடியாததற்குக் காரணம், தேர்தல் சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டியது மத்திய அரசின் பொறுப்பாக இருப்பதுதான்.

ஜே. பி. நடத்திய மாபெரும் இயக்கமும் அதன் பின் விளைவாக எமெர்ஜென்ஸி வந்ததும் பிறகு இந்திரா அரசு வீழ்ச்சி அடைந்ததும் சமீபத்திய சரித்திரம். ஜே. பி. இயக்கத்தின் பிரதான கோரிக்கையே தேர்தல் சீர்திருத்தம்தான்! நாடாளுமன்றத்தின் இரு சபைகளையும் சேர்ந்த அங்கத்தினர்களை உள்ளடக்கிய நாடாளுமன்றக் குழு ஒன்று தேர்தல் சீர்திருத்தங்கள் பற்றி விரிவாக ஆராய்ந்து ஓர் அறிக்கை சமர்ப்பித்திருக்கிறது. இந்தக் குழுவில் ஆளும் காங்கிரஸ் ஆட்சி உறுப்பினர்களும் இடம் பெற்றிருந்தனர். இக் குழுவின் அறிக்கையை அப்படியே அமுல்படுத்த உடனடியாக மத்திய அரசு ஒப்புதல் அளித்துத் தாமதமின்றி முயற்சி மேற்கொள்ள வேண்டும் என்பதே ஜே. பி. கோரிக்கைகளில் தலையாயது. ஆனால் மத்திய அரசு இது விஷயத்தில் இன்று வரை சுண்டு விரலைக் கூட அசைக்கவில்லை.

தேர்தலுக்கு ஒரு வாரம் முன்னதாகவே மதுக்கடைகள் மூடப்பட்டுத் தேர்தலுக்கு மறுநாளே திறக்கப்பட வேண்டும் என்பதும் ஜே. பி. யின் விருப்பம். அதோடு, தேர்தல் தினத்தன்று சாலையில், தேர்தல் கமிஷனைச் சேர்ந்த தேர்தல் நிர்வாகிகளின் வாகனங்களைத் தவிர வேறு எந்த வண்டி வாகனமும் செல்லக் கூடாது என்று தடை உத்தரவு பிறப்பிக்க வேண்டும் என்றும் அவர் விரும்பினார். வோட்டுக்கள் ஒவ்வொரு வோட்டுச் சாவடியிலும் எண்ணப்பட்டு, ஒவ்வொரு வோட்டுச் சாவடியும் தேர்தல் முடிந்தகையோடு வோட்டுக்களின் கணக்கை அறிவிக்க வேண்டும் என்றார். (இப்போது வோட்டுச் சாவடிகளிலிருந்து வோட்டுப் பெட்டிகள் தொகுதியில் மையமான இடத்துக்குக் கொண்டு போகப்பட்டு ஒட்டு மொத்தமாய் எண்ணப்படுகின்றன. இந்தப் பயணத்தின் இடையிலேயே தகிடுதத்தங்கள் நடக்க வாய்ப்புண்டு.) இவை தவிர தாங்கள் தேர்ந்தெடுத்து அனுப்பிய பிரதிநிதி சரியாக நடந்து கொள்ளவில்லை என்றால் அவரைப் பதவி இறக்கம் செய்யும் உரிமையும் மக்களுக்கு இருக்க வேண்டும் என்றார் ஜே. பி. இதற்காக அவர்கள் அடுத்த தேர்தல் வரை காத்திருக்கும்படி



• கட்சிகளின் எண்ணிக்கை குறைய வழி.



• மனமிருந்தும்: மார்க்கமில்லை.

நேரக் கூடாது என்பது அவர் கருத்து.

ஜே. பி.யைப் போலவே அல்லது அதைவிடவும் அதிக அக்கறையுடன் தேர்தல் கமிஷனே பல சிபாரிசுகளை மத்திய அரசுக்குச் செய்துள்ளது. அவற்றுள் முக்கியமானவை பின்வருமாறு:

மெய்யான ஈடுபாடு இல்லாமல் சும்மா விளையாட்டுக்குத் தேர்தலில் நிற்பதாகக் கூறிக் கொண்டு வருகிறவர்களைத் தடுத்துவிட கமிஷனுக்கு உரிமை இருக்க வேண்டும். ஒரு வேட்பாளர் இரண்டு தொகுதிகளுக்கு மேல் தமது வேட்பு மனுவைத் தாக்கல் செய்யக் கூடாது. இதற்குத் தடை விதிக்க வேண்டும். சட்டப்படி குற்றவாளி என்று தீர்ப்புப் பெற்றுள்ள ஒருவர், தேர்தலுக்கு நிற்பதைத் தடை செய்யும் அதிகாரம் கமிஷனுக்கு இருக்க வேண்டும். தேர்தல் கூட்டங்களில் கலாட்டா செய்பவர்களைக் கடுமையாகத் தண்டிக்க வேண்டும். வோட்டுச் சாவடிகளைக் குண்டர்களைக் கொண்டு கைப்பற்றும் போக்கைத் தடுக்கத் தீவிர நடவடிக்கை தேவை. வோட்டர்களுக்கு அடையாளச் சீட்டு வழங்க வேண்டும்.

இவ்வாறு பல சிபாரிசுகளைத் தேர்தல் கமிஷன் செய்துள்ளது. பிரதமர், முதல்வர், அமைச்சர்கள் ஆகியோர், தங்கள் பி.ஏ. முதலானோரைத் தேர்தல் வேலைகளைக் கவனிக்கும் படி கூறக் கூடாது; தாங்கள் மேடை ஏறிப் பேச அரசுச் செலவில் தேர்தல் மேடைகளை அமைக்கச் சொல்லக் கூடாது; நாடாளுமன்றம் கலைக்கப்பட்ட பிறகு தேர்தல் நடந்து முடியும் வரை ஆட்சியில் இருப்பவர்கள் ஒரு தாற்காலிக காபந்து சர்க்கார் மாதிரிதான் நடந்து கொள்ள வேண்டும்; மாநிலங்களில் தேர்தல் அறிவிக்கப்பட்ட நாளிலிருந்தே ஜனாதிபதி ஆட்சி வந்து, புதியஆட்சி பதவி ஏற்கும் வரை நீடிக்க வேண்டும்; ஹெட் கான்ஸ்டபிள் பதவிக்கு மேற்பட்ட எந்த போலீஸ் அதிகாரிக்கும் மாற்றல் உத்தரவு, தேர்தல் அறிவிக்கப்பட்ட பிறகு போடக் கூடாது; அரசாங்க எந்திரம் ஆளும் கட்சி நலனுக்காகத் துஷ்பிரயோகமானதாகத் தெரிய வந்தால் தேர்தலைச் செல்லாது என அறிவிக்க மாநில உயர்நீதி மன்றத்துக்கு அதிகாரம் வழங்கப்பட வேண்டும். இவையும் கூட

தேர்தல் கமிஷன் சிபாரிசுகளே.

ஆனால் இவற்றைக் கேட்டுக் கொண்டு, தக்க சட்டங்களை இயற்றி, அமுல்படுத்துகிற மனம்தான் மத்திய அரசுக்கு இல்லை.

தேர்தல் செலவுகளில் ஒரு மிகப் பெரிய மோசடி நடக்கிறது. வேட்பாளர் என்ற முறையில் தனி நபர் செலவழிக்கக் கூடிய தொகைக்கு உச்சவரம்பு உண்டு. ஆனால் கட்சி செலவழிக்கக் கூடிய தொகைக்கு எந்தவிதமான உச்சவரம்பும் இல்லை. எனவே எல்லா வேட்பாளரும் எவ்வளவு வேண்டுமானாலும் செலவழிக்கிறார்கள். வரம்புக்கு மேற்பட்ட செலவை கட்சி தங்களுக்காகச் செலவழித்ததாகக் கூறி விடுகிறார்கள்!

இது பெரிய அநீதி என்றும் உச்சவரம்பு விதிப்பதன் நோக்கத்தையே அபத்தமாக்குகிறது என்றும் சுப்ரீம் கோர்ட்டே ஒரு தீர்ப்பில் கூறியுள்ளது. அதுமட்டுமல்ல, சௌலா என்ற ஒரு காங்கிரஸ் வேட்பாளரின் வெற்றி செல்லாது என்றும் தீர்ப்பளித்தது. இதன் விளைவாக உடனே ஆளும் காங்கிரஸ் கட்சி, மேலும் சில விதிமுறைகளை மாற்றி அமைத்து, சௌலா போன்றவர்களின் வெற்றியை உறுதிப்படுத்தியதேயொழிய, அநீதிக்குப் பரிகாரம் காணும் விதமாகச் சட்டத்தை மாற்றி அமைக்கத் தயாராக இல்லை! ஆக, நாட்டின் உச்ச நீதி மன்றத்தின் கருத்தும் அலட்சியப்படுத்தப்படுகிறதே தவிர, தேர்தல் சீர்திருத்தத்துக்கு ஆளும் காங்கிரஸ் கட்சி ஆதரவு தருவதாக இல்லை.

ராஜீவ் காந்தி பதவிக்கு வந்த சில காலத்துக்குள் தேர்தல் சீர்திருத்தங்களைக் கொண்டுவரப் போவதாகப் பலமாக மார் தட்டினார். அதோடு சரி. இப்போது அந்த ஆர்வமெல்லாம் அடியோடு அவரிடமிருந்து விடைபெற்றுச் சென்று விட்டதாகவே காண்கிறது.

தேர்தலில் வேட்பாளர் செய்த செலவு, கட்சி செய்த செலவு என்று கணக்குக் காண்பித்தால் மட்டும் போதாது. எல்லாக் கட்சிகளுமே ஆண்டுக்கு ஒரு முறை தணிக்கை (audit) செய்யப்பட்ட கணக்குகளைப் பகிரங்கமாக அறிவிக்க வேண்டும். லிமிடெட் கம்பெனிகளின் பாலன்ஸ் ஷீட்டுகளைப் போல, கட்சிகளின் ஆண்டுக் கணக்குகளும் மக்களின் பார்வைக்கு வர வேண்டும்.

இவற்றையெல்லாம் ஒன்று விடாமல் நிறைவேற்றினால் தேர்தலில் 98 முதல் 99 சதம் வரை நேர்மை இருக்கும். ஆனால் அத்தைக்கு மீசை முளைத்தால்தானே சித்தப்பா ஆக முடியும்!

— வி. ராஜேந்திரன்

படங்கள்: சுபா

அட்டை வண்ணச் சித்திரம்: மருது

# "அரசியலின் தரம் தாழ்ந்து விட்டது!"

## —ம.பொ.சி. சொல்கிறார்...

நமது சுதந்திரத்திற்கு முன்பு '37—வரை நடந்த தேர்தல்களில் சொத்து வரியும்/ வருமான வரியும் செலுத்துபவர்களுக்குத்தான் வாக்குரிமை இருந்தது. இப்போதுள்ள மாதிரி தேர்தலுக்காக யாரும் லட்சக்கணக்காகவும் கோடிக்கணக்காகவும் செலவு செய்ய வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. பத்திரிகைகளிலும் அப்போது தேர்தலைப் பற்றிய ஆரவாரங்கள் இருந்ததில்லை. தேர்தல் நடப்பதே தெரியாத அளவுக்கு அமைதியாக நடந்தது.

இந்நிலையில்தான் 'வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை வழங்கப்பட வேண்டும்' என்று சத்தியமூர்த்தி தலைமையில் காங்கிரஸ் போராடியது. அதுபற்றி ஆராய அப்போதைய பிரிட்டிஷ் அரசு லோத்தியன் என்பவர் தலைமையில் ஒரு கமிஷன் அமைத்தது. அவர், 'வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை வழங்க இயலாது. எழுதப் படிக்கத் தெரிந்தவர்களுக்கெல்லாம் வாக்குரிமை வழங்கலாம்' என்று சிபாரிசு செய்தார். அது '37—ல் நடந்த தேர்தலில் அமல்படுத்தப்பட்டது. அப்போதும் இன்றைய தேர்தல் தகிடுதத்தங்களெல்லாம் இல்லை.

நாடு விடுதலையடைந்த பிறகு '52—ல் நடந்த தேர்தலில்தான் – வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை என்று கொண்டு வரப்பட்ட பிறகுதான் — தேர்தலைப் பற்றிய ஒரு பரபரப்பே மக்களிடம் வந்தது. செலவு செய்ய வசதியுடையவர்கள் தான் தேர்தலில் போட்டியிட முடியும் என்ற நிலை உருவானது. கூடவே, ஊழலும் தகிடுதத்தங்களும் மெதுவாகத் தலைகாட்ட ஆரம்பித்தன.

வண்ண வண்ணப் போஸ்டர்களும் அலங்கார விளக்குகளும் வளைவுகளும் பிரும்மாண்டமான கட் அவுட்களும் லட்சக்கணக்கான பணம் இல்லாமல் எப்படிப் பரிணமிக்க முடியும்? அவற்றுக்காகக் கட்சிகள் பணம் சேர்க்க ஆரம்பித்தன. ஆளுங்கட்சி லஞ்சம் வாங்க ஆரம்பித்தது. சுயதேவை



களுக்காக லஞ்சம் வாங்காத தூய்மையான அரசியல்வாதிகள் கூடத் தேர்தல் செலவுக்காக லஞ்சம் வாங்க வேண்டியதாயிற்று. முன்பு ஒரு முறை ஓர் அமைச்சரே, 'நான் அரசாங்கம் நிர்ணயித்துள்ள தேர்தல் செலவுக்கான பணத்தைப் போல் பத்து மடங்கு அதிகம் செலவழித்தேன். இந்நிலை மாற வேண்டும்' என்று பேசினார் என்றால் தேர்தல் செலவு என்பது எத்தகையதோர் கொடிய நஞ்சு என்பதைப் பாருங்கள்! பின் அந்த அமைச்சர் எப்படி லஞ்சம் வாங்காமல் இருக்க முடியும்?

முன்பெல்லாம் எப்போதாவது நடக்கும் இடைத் தேர்தல் பற்றி யாருக்கும் ஒன்றும் தெரியாது. அந்த அளவுக்கு ஒரு சாதாரணச் சடங்கு போல்தான் நடைபெறும். ஆனால் இப்போது? ஓர் இடைத் தேர்தலுக்கே ஒவ்வொரு கட்சியும் இருபது லட்சம், முப்பது லட்சம் என்று செலவு செய்வதாகச் சொல்கிறார்கள். இதெல்லாம் யாருடைய பணம்?

**இ**ப்போதெல்லாம் கள்ள வாக்குகளும் அதிகமாகிப் போய் விட்டன. கட்சிகளின் முக்கிய தலைவர்கள் போட்டியிடும் போது அவர்களின் வெற்றிக்காகப் பக்கத்துத் தொகுதிகளிலிருந்து கட்சிக்காரர்களை வரவழைத்துக் கள்ள வாக்குப் போடுகிறார்கள். வாக்காளர் பட்டியலில் பெயர் இருந்தும் வாக்குரிமையைப் பயன்படுத்தாதவர் பெயரில் இவர்கள் வோட்டுப் போட்டு விட்டு வந்து விடுகிறார்கள்! இப்படிக் கள்ள வாக்குப் போடுவதென்பது இப்போதுதான் என்பதில்லை. முன்பு வாக்குச் சீட்டை மறைவான இடத்திலுள்ள வாக்குப் பெட்டியில் போடும் முறை இருந்த காலத்திலும்கூட நடந்தது. வாக்குச் சீட்டை மறைவானஇடத்தில்சென்று பெட்டிக்குள் போடாமல், சட்டைப் பையில் போட்டுக் கொண்டு வந்து வெளியிலுள்ள தமக்கு வேண்டிய கட்சிக்காரர்களிடம் கொடுத்து விடுவார்கள். கணிசமான அளவுக்கு வாக்குச் சீட்டுச் சேர்ந்ததும் அவற்றையெல்லாம் ஒட்டு மொத்தமாக ஒரு வாக்காளர் எடுத்துச் சென்று தமக்கு வேண்டிய கட்சி வேட்பாளருக்குப் போட்டுவிட்டு வருவார். அதற்கெல்லாம் பணம் உண்டு.

இந்த நிலை ஒழிய வேண்டும் என்பதற்காகத்தான் வாக்குப் பதிவு செய்வதை மட்டும் மறைவான இடத்தில் வைத்துக் கொண்டு, வாக்குச் சீட்டைப் பெட்டிக்குள் போடும் இடத்தைத் தேர்தல் அதிகாரிகள் முன்னிலையில் வைத்தனர். எனினும் கள்ள வாக்குகள் ஒழிந்த பாடில்லை. ஒரு முறை வாக்குப் போட்டவரே விரலில் வைக்கப்படும் அடையாள மையை அழித்துவிட்டு மறுபடியும் சென்று கள்ள வாக்குப் போடுகிறார். எல்லாம் பணம் பண்ணும் மாயம் தான்!

இவற்றோடு இன்றைய அரசியலும் தரம் தாழ்ந்து போய் விட்டதென்றுதான் சொல்ல வேண்டும். முன்னாள் குடியரசுத் தலைவர் ஜெயில்சிங் தாம் மறுமுறை போட்டியிடுவதற்காகச் சிலர் நாற்பது கோடி ரூபாய் வரை செலவிடத் தயாராய் இருந்ததாகச் சொல்லியிருக்கிறார். அரசியல் தூய்மைக்காக அவர் அந்த நபர்களின் பெயர்களை வெளியிட வேண்டாமா? இதே நேரத்தில் தமிழக எம். பி. ஒருவர் தமக்கு எதிரணிக்காரர்கள் ஐந்து லட்ச ரூபாய் லஞ்சம் கொடுத்ததாக ரூபாய் நோட்டுகளை நாடாளுமன்றத்திலேயே கொட்டியிருக்கிறார். இந்தச் செய்தியைப் படித்ததும் நான் கண் கலங்கினேன். இதன் பின்னணி யாதாயினும் சரி, அகில உலக அளவில் மரியாதையுள்ள பதவியான எம். பி. பதவியிலுள்ள ஒருவருக்கு இந்த நிலையா? தமிழகத்திற்கே தலைகுனிவு இது.

**மே**லும் இன்றைய தேர்தல் பிரசார மேடைப் பேச்சுக்களும் தெருப் புழுதி போல் ஆகிவிட்டன. கேட்கவே கூசுகிறது. கடந்த 62 — தேர்தல் பிரசாரத்திற்காகத் தமிழகம் வந்திருந்த ஜவாஹர்லால் நேரு, காமராஜரிடம், 'நான் யாரைத் தாக்கிப் பேச? எதைத் தாக்கிப்பேச?' என்று கேட்டார். அன்றைக்கு அந்த அளவுக்கு அரசியல் மேடைப் பேச்சுக்கள் கண்ணியமாக இருந்தன. ஆனால் இன்றைய நிலையோ... அன்றாடமும் நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோமே! என்னைக் கேட்டால் தமிழகத் தேர்தலை இன்னும் ஓராண்டுக்கு ஒத்தி வைத்துவிட்டு, பிறகு நாடாளுமன்றத் தேர்தலை ஓர் ஆண்டுக்கு முன்பாகவே கொண்டு வந்து, இரண்டையும் சேர்த்து அனைத்திந்திய அளவில் தேர்தல் நடத்த வேண்டும். அப்படி நடந்தால்தான் — மக்களுடைய கவனம் அனைத்திந்திய அளவில் இரும்பும்போதுதான் தமிழகத்தில் நடக்கும் தெருப் புழுதிப் பிரசாரங்கள் பெரிதுபடுத்தப்படாமல் இருக்கும்; தமிழகத்தின் கண்ணியம் காக்கப்படும் என்றும் கருதுகிறேன்.

தொகுப்பு: **பிரின்ஸ்**

படம்: **'சுபா' ராமசந்திரன்**



# "எதிர்க் கட்சிகளுக்குப் பாராளுமன்றத்தில் மரியாதை இல்லை!"

## —தெலுங்கு தேசம் எம்.பி. உபேந்திரா பேட்டி

**அண்மையில், ஆந்திர கவர்னரின் வரம்பு மீறிய செலவுகள் பற்றி உபேந்திரா ராஜ்ய சபையில் பேச எழுந்தபோது, உண்மைகளை மறைக்க ஆளுங்கட்சி உறுப்பினர்கள் விரும்பிக் குறுக்கிட்டு இவரைப் பேச விடாமல் தடுக்கப் பார்த்தார்கள். இது பெரிய பிரச்னையாகித் துணை ஜனாதிபதியும் ராஜ்யசபைத் தலைவருமான எஸ். டி. சர்மா தாம் ராஜினாமா செய்யத் தயார் என்று கூறுமளவுக்குப் போய்விட்டது. பழுத்த அரசியல்வாதி போல் செயல்படும் உபேந்திரா அரசியல் சாணக்கியத்தை யாரிடமிருந்து கற்றுக் கொண்டார்? அவரது அரசியல் பின்னணி என்ன? ஆளுங்கட்சியினரின் பாராளுமன்ற நடத்தை எப்படி? ராஜீவ் காந்தி எப்படி? முன்பு ஹைதராபாத் விமான நிலையத்தில் இவரைப் பார்த்துச் சோனியா காந்தி கூறியது என்ன? எல்லாவற்றையும் இந்தப் பேட்டியில் விளக்குகிறார் உபேந்திரா...**

**கே**ள்வி: அரசியலுக்கு வருவதற்கு முன்பு உங்கள் வாழ்க்கையைப் பற்றிச் சுருக்கமாகக் கூற முடியுமா?

உபேந்திரா: ஆந்திரா பல்கலைக் கழகத்திலிருந்து ஆங்கில இலக்கியத்தில் எம். ஏ. பட்டமும், சென்னைப் பல்கலைக் கழகத்திலிருந்து ஜர்னலிஸத்தில் டிப்ளமாவும் பெற்றேன். பிறகு, ரயில்வே இலாகாவில் 1957 —லிருந்து 1974 — வரை பொதுத் தொடர்பு அதிகாரியாகவும் 1974 —லிருந்து 1982 — வரையில் 'இந்தியன் ரயில்வே' என்ற ரயில்வே போர்டின் ஆங்கிலச் சஞ்சிகையின் ஆசிரியராகவும் பணியாற்றினேன். இடையே ஜனதா ஆட்சியின் பொழுது, மத்திய ரயில் அமைச்சராக இருந்த திரு. மது தண்டவதேயின் சிறப்பு உதவியாளராக இருந்தேன். 1982 —ல் எனது அரசாங்க வேலையை ராஜினாமாச் செய்துவிட்டுத் தெலுங்கு தேசம் கட்சியில் போய்ச் சேர்ந்தேன். கட்சியின் ஆரம்ப காலத்திலிருந்தே தேர்தல் பிரசாரங்கள் செய்வதிலும், கட்சியை உருவாக்குவதிலும், திரு. என். டி. ராமராவுக்குத் துணையாக இருந்தேன். 1983 — லிருந்து '85 வரை கட்சியின் பொதுச் செயலாளராக இருந்த, என்னை 1984 — ஆம் ஆண்டு மாநிலங்களவையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுத்தார்கள்.

கேள்வி: உங்கள் குடும்பச் சூழலுக்கும் அரசியலுக்கும் ஏதாவது தொடர்பு உண்டா?

உபேந்திரா: என் குடும்பத்தைச் சேர்ந்த உறவினர்கள் சிலர் இந்திய விடுதலைப் போராட்டத்தில் பங்கு எடுத்துக் கொண்டு சிறைக்குச் சென்றவர்கள். அதனால் சின்ன வயதிலிருந்தே எனக்கும் அரசியலில் ஈடுபாடு இருந்தது. பத்துப் பன்னிரண்டு வயதிலேயே சிறிய அளவில் மாணவர் அமைப்பு ஒன்றை உருவாக்கினேன். பதினைந்து வயதில், **Democratic Students Union of Andhra** (சோஷலிஸ்ட் கட்சியின் மாணவர் பிரிவு) உருவாவதற்குக் காரணமாக இருந்தவர்களில் நானும் ஒருவன். சுவாமி சீதாராம், ஆந்திரப் பிரிவினைக்காக நடத்திய சத்தியாக்கிரஹப் போராட்டத்தில் மாணவர் தலைவனாகப் பங்கேற்றுச் சிறைப்படுத்தப்பட்டேன். நான் வேலையில் சேர்ந்த பிறகும் அரசியலில் எனக்கு இருந்த ஆர்வம் குறையவில்லை. 1960 —ல் நான் கல்கத்தாவில் பணியாற்றிக்

கொண்டிருந்த பொழுதே, காங்கிரஸ் கட்சி, சி. பி. ஐ. மற்றும் சி. பி. ஐ. (எம்) ஆகிய இரண்டு கம்யூனிஸ்ட் கட்சிகளும் ஒரு குறிப்பிட்ட தொகுதியில் எனக்கிருந்த செல்வாக்கைப் பார்த்து என்னைத் தேர்தலில் போட்டியிடும்படி கேட்டன. பிறகு சஞ்சீவய்யா வேலையை ராஜினாமா செய்து விட்டுக் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து தேர்தலில் போட்டியிடுமாறு அழைப்பு விடுத்தார். 1980 —லும் காங்கிரஸ் கட்சியில் சேரும்படி அழைப்பு வந்தது. ஆனால் என்னுடைய சோஷலிசத் தொடர்புகளினாலும், சிந்தனைகளினாலும் நான் ஆரம்ப முதலே காங்கிரஸ் எதிரியாக இருந்தேன்.

கேள்வி: என். டி. ராமராவுக்கும் உங்களுக்கும் எப்படித் தொடர்பு ஏற்பட்டது? தெலுங்கு தேசம் கட்சியில் சேர்ந்த பிறகா? அல்லது முன்பே பழக்கம் உண்டா?

உபேந்திரா: எனக்கு அவரிடம் அவர் கட்சி ஆரம்பிக்கு முன் பழக்கம் கிடையாது; நான் அவருடைய படங்களையும் அதிகம் பார்த்தது இல்லை. திரு என். டி. ராமராவ் கட்சியை ஆரம்பித்த அதே காலகட்டத்தில் எனக்கும் ஆந்திர மாநிலத்தின் நிலைமையைப் பற்றிக் (அடிக்கடி முதலமைச்சர்கள் மாற்றப்படுவது; லஞ்ச ஊழல்) கவலையும் வேதனையும் தோன்ற ஆரம்பித்தது. ஆந்திர மக்களுக்காக ஏதாவது செய்ய வேண்டும் என்று என்னுள் ஓர் உத்வேகம் ஏற்பட்டது. ஆந்திர மக்களும் அரசியலில் ஒரு மாற்றத்தை எதிர்பார்த்தார்கள். இந்தச் சூழ்நிலையில் என். டி. ஆர். சமயசஞ்சீவியாகப் புதிய கட்சியை ஆரம்பித்தார். நான் முதலில் என். டி. ஆரைச் சந்தித்த பொழுது, 'நல்ல அரசாங்க உத்தியோகத்தை விட்டு விட்டு, நிச்சயமற்ற புதிய அரசியல் கட்சிக்கு வருவது ஆபத்தானது' என்று தான் சொன்னார். இருந்தாலும் என்னுடைய ஆர்வத்தைப் பார்த்துவிட்டு என்னைத் தமது கட்சியில் சேர்த்துக் கொண்டார்.

கேள்வி: நீங்கள் மாணவராக இருந்த பொழுது சோஷலிசக் கட்சியுடன் தொடர்பு கொண்டிருந்தீர்கள்; பிறகு ஜனதா கட்சித் தலைவரான மதுதண்டவதேயுடனும் பணியாற்றினீர்கள். கல்கத்தா, தில்லி என்று நாட்டின் பல திசைகளிலும் இருந்து பழகி விட்டு, எப்படி ஒரு பிராந்தியக் கட்சியான தெலுங்கு தேசக் கட்சியில் போய்ச் சேர்ந்தீர்கள் என்று சொல்ல முடியுமா?

உபேந்திரா: பிராந்தியக் கட்சிகள் தாம் அந்தந்தப் பிராந்தியங்களின் பிரச்னைகளுக்குத் தீர்வு காண முடியும் என்று நான் நினைக்கிறேன். காங்கிரஸ் மேலிடத்தின் போக்கே பிராந்தியக் கட்சிகள் வளருவதற்கு முக்கிய காரணமாகும். மக்களுக்குத் தேசியக் கட்சிகளிடம் ஏற்பட்டுள்ள அதிருப்தியின் காரணமாகவே இன்று பல பிராந்தியக் கட்சிகள் உருவாகியிருக்கின்றன.

கேள்வி: தெலுங்கு தேசக் கட்சியின் பாராளுமன்றத் தலைவராக நீங்கள் எவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டீர்கள்?

உபேந்திரா: தெலுங்கு தேசக் கட்சியில், ஆரம்ப காலத்திலிருந்தே கட்சியை உருவாக்கும் பணியில் நான் ஈடுபட்டிருந்தேன். 1984 —ல் நான் மாநிலங்களவையின் உறுப்பினராக வந்த பொழுது, நாங்கள் ஐந்து பேர் வந்தோம். மக்களவையில் இரண்டு பேர் இருந்தார்கள். நான் ஏற்கெனவே தில்லியில் பல ஆண்டுகள் இருந்ததனாலும், எனக்குப் பல மொழிகளில் பரிச்சயம் இருப்பதினாலும், திரு. ராமராவ் என்னைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தார்.

கேள்வி: நீங்கள் 1982 — ஆம் ஆண்டு அரசியலில் புகுந்ததாகக் குறிப்பிட்டீர்கள். இத்தனை குறுகிய காலத்திற்குள், பாராளுமன்றத்தில், அவ்வப்பொழுது பிரச்னைகளை எடுத்துச் சொல்லிப் பரபரப்பை ஏற்படுத்தி, உங்களுக்கென்று ஓர் இடத்தைப் பிடித்திருக்கிறீர்கள். இந்தச் சாதனையின் இரகசியம் என்ன?

உபேந்திரா: நான் என்றுமே என்னுடைய வேலையில் சிரத்தையுடனும், உண்மை

> ...பல பாராளுமன்ற உறுப்பினர்கள் தங்களுக்குக் கிடைத்திருக்கும் சந்தர்ப்பத்தைச் சரியானபடி பயன்படுத்திக் கொள்வதில்லை என்பதே எனது குற்றச் சாட்டு......



யாகவும் உழைப்பவன். பல பாராளுமன்ற உறுப்பினர்கள் தங்களுக்குக் கிடைத்திருக்கும் சந்தர்ப்பத்தைச் சரியான படி பயன்படுத்திக் கொள்வதில்லை என்பதே என்னுடைய குற்றச்சாட்டு. எனக்குக் கிடைத்திருக்கும் இந்தச் சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்தி, மக்களுக்கு என்னால் முடிந்ததைச் செய்ய நான் மிகவும் சிரத்தையுடன் உழைக்கிறேன். மேலும் தெலுங்கு தேசக் கட்சி, பாராளுமன்றத்தில் எதிர்க்கட்சி வரிசையில் முன்னணியில் இருப்பதால் ஆந்திராவின் பிரச்னைகளை மட்டும் அல்லாமல், நாட்டின் எல்லாப் பிரச்னைகளிலும் அக்கறை கொள்ள வேண்டிய பொறுப்பும் எங்களுக்கு உள்ளது. இதற்கு நான் பல ஆண்டுகளாகத் தில்லியில் இருப்பதும், பார்வையாளராகப் பாராளுமன்ற நடவடிக்கைகளைக் கவனித்து வந்ததும் என்னுடைய அரசியல் ஆர்வமும் எனக்கு உதவுகின்றன என்று சொல்லலாம்.

கேள்வி: உங்களுடைய பாராளுமன்ற நடவடிக்கைகளுக்கு யார் குரு? அதாவது யாராவது தலைவர்களை முன்னோடியாக நினைக்கிறீர்களா?

உபேந்திரா: நிச்சயமாக, எச். வி. காமத், நாத்பாய், மதுலிமயே, ஜோதிர்மாய் பாசு போன்ற பாராளுமன்ற ஜாம்பவான்கள் மக்களின் நலனுக்காகப் போராடியிருக்கிறார்கள். அவர்களைப் போல் நாமும் கடமையில் குறியாக இருந்தால் மக்களுக்காக எவ்வளவோ செய்யலாம். எத்தனையோ பிரச்னைகள் இருக்கின்றன. எல்லாவற்றிற்கும் தீர்வு காண முடியாவிட்டாலும், குறைந்த பட்சம் பிரச்னைகளை ஆளும் கட்சியின் கவனத்திற்காவது கொண்டு வரலாமல்லவா! ஆளும் கட்சி உறுப்பினராக இருந்து கொண்டு எல்லாவற்றிற்கும் 'ஆமாம் சாமி' போடுவது ரொம்பச் சுலபம். ஆனால் எதிர்க் கட்சியில் இருந்து கொண்டு, குற்றம் குறைகளைத் தொடர்ந்து கண்காணித்து, அவ்வப்பொழுது எடுத்துரைப்பதற்கு நல்ல உழைப்புத் தேவை. எதிர்க்கட்சி உறுப்பினர்களுக்குப் பொறுப்பும் அதிகம்.

கேள்வி: உங்களுக்குத் தில்லியில் உள்ள நண்பர்கள் யார், யார்? குறிப்பாக மாற்றுக் கட்சியைச் சேர்ந்த நண்பர்கள் யாராவது உண்டா?

உபேந்திரா: எனக்கு நெருங்கிய நண்பர்கள் என்று யாரும் கிடையாது. நான் ஒரு தனிமை விரும்பி.

கேள்வி: அப்படியானால் யாருடனும் நீங்கள் அதிகம் பழக மாட்டீர்களா?

உபேந்திரா: அப்படியில்லை... கருத்துக்கள் ஒரே மாதிரி உள்ளவர்களிடம்தான் நெருங்கிப் பழக முடியும். அதற்காக நான் ஒருவரிடமும் சிநேகமாக இருக்க மாட்டேன் என்று சொல்ல முடியாது. மாறுபட்ட கட்சியைச் சேர்ந்தவர்களின் நட்பும் உண்டு. என்னை விசேஷங்களுக்கு அழைத்தால், அவர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் போவேன்.

கேள்வி: சில நண்பர்களின் பெயர்களை, குறிப்பாகக் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள்....

உபேந்திரா: எல்லோருமே எனக்கு நண்பர்கள்தாம்.

கேள்வி: எம். ஜி. ஆரின் மறைவுக்குப் பிறகு, அண்டை மாநிலத்து எம். பிக்களான தமிழ்நாட்டு எம். பிக்களின் பாராளுமன்ற நடவடிக்கைகளில் முக்கியமான மாற்றங்கள் ஏதாவது உண்டா?

உபேந்திரா: முன்பெல்லாம் அ. இ. அ. தி. மு. க. உறுப்பினர்கள் கண்ணை மூடிக் கொண்டு ஆளும் கட்சியை ஆதரித்துக் கொண்டிருந்தார்கள். தவறான விஷயங்களில் கூடக் காங்கிரஸை ஆதரித்தார்கள்... எதிர்ப்பது போலப் பேச ஆரம்பித்தாலும் கடைசியில் ஆதரிப்பதாகவே முடிப்பார்கள். எம். ஜி. ஆரின் மறைவுக்குப் பிறகு திருமதி ஜானகி அணியைச் சேர்ந்தவர்கள் எதிர்க்கட்சிகளுடன் சேர்ந்து கொண்டு எங்கள் பலத்தைக் கூட்டியிருக்கிறார்கள்.

கேள்வி: பாராளுமன்றத்தில் எதிர்க்கட்சிகளுக்கு வேண்டிய மரியாதை கிடைக்கிறதா?

உபேந்திரா: நிச்சயமாக இல்லை என்பதை வருத்தத்துடன் கூறுகிறேன். இன்றைய ஆளும் கட்சி பாராளுமன்றத்திற்கும், அதன் நடவடிக்கைகளுக்கும் வேண்டிய மதிப்பு அளிப்பதில்லை என்பதே என் கருத்து.

கேள்வி: எதிர்க்கட்சிகளின் ஆலோசனைகளை மதிக்கிறார்களா?

உபேந்திரா: ஆரம்ப காலத்தில், அதாவது திரு ராஜீவ் காந்தி பதவிக்கு வந்த புதிதில், ஓராண்டு காலத்திற்கு, முக்கியமான பிரச்னைகளைப் பற்றி எதிர்க்கட்சிகளுடன் கலந்து பேசுவார். அப்பொழுது எதிர்க்கட்சிகளின் கருத்துக்களுக்கு அவர் மதிப்புக்கொடுப்பவர் போல்தான் தோன்றினார். ஆனால் அவர் போகப் போக மாறிப் போய்விட்டார். இப்பொழுது அவர் பாராளுமன்ற நடவடிக்கைகளுக்குப் போதிய மதிப்புக் கொடுப்பதாகத் தெரியவில்லை. பாராளுமன்றம் நடக்கும் சமயத்தில் அடிக்கடி வெளிநாட்டிற்குப் போய் விடுகிறார். தில்லியிலேயே இருந்தாலும் பெரும்பாலும் அவர் பாராளுமன்றத்திற்கு வருவதில்லை. நாங்கள் நியாயமான வாதங்களை எடுத்துச் சொன்னாலும் அவற்றுக்கு ஒரு முக்கியத்துவமும் கொடுக்காமல், பிரதமரும் அவருடைய அமைச்சர்களும் எங்களுக்கு எதிரான பாயிண்ட்களைத் தொடுப்பதிலேயே குறியாக இருக்கிறார்கள். அதனால் நாங்கள் இவ்வளவு கஷ்டப்பட்டு உழைப்பதினால் என்ன பயன் என்ற சலிப்புக் கூட சில சமயங்களில் எங்களுக்கு உண்டாகிவிடுகிறது. ஜவாஹர்லால் நேரு

‘ ...சோனியா காந்தி என்னை மிரட்டினார்.... அப்போது ஆந்திர கவர்னரும் ரொம்ப வேடிக்கையாக நடந்து கொண்டார்... ’



பாராளுமன்றத்திற்கும், அதன் நடவடிக்கைகளுக்கும் மிகவும் முக்கியத்துவம் அளித்தார். எதிர்க்கட்சிகளின் வாதங்களை ஒரு நல்ல விமர்சனமாக அவர் ஏற்றுக் கொண்டார். இந்திரா காந்தியின் காலத்தில் இந்த நிலைமை ஓரளவிற்குச் சீர்குலைந்தது. கட்சி வேறுபாடுகள் இருந்தாலும், அவர் தனிப்பட்ட முறையில் யாரிடமும் விரோதம் பாராட்டியது இடையாது. ஆனால் இப்பொழுதோ எல்லாமே தனிப்பட்ட முறையிலான விரோதங்களாகவே எடுத்துக் கொள்ளப்படுகின்றன. அரசாங்கத்தின் கொள்கைகளையோ, நடவடிக்கைகளையோ குற்றம் சொன்னால் உடனே அவர்கள் பிரதமருக்கும், அவர் அரசிற்கும் வேண்டப்படாதவர்களாகி விடுகிறார்கள். எப்போதாவது பிரதமரைச் சந்தித்துப் பேசச் சிறிது நேரம் ஒதுக்கக் கேட்டால் கூடக் கொடுக்கப்படுவதில்லை. இது மிகவும் வருந்தத்தக்க விஷயம். ஜனநாயக அமைப்பில் அரசியல் ரீதியாக ஒருவரை ஒருவர் எதிர்த்துக் கொண்டாலும், பாராளுமன்றத்திற்கு அப்பால் நல்ல உறவு இருப்பது அவசியம். இது இன்றைய ஆட்சியில் இல்லாதது வருந்தத்தக்கது.

கேள்வி: அண்மைக் காலத்தில் பத்திரிகைகளில் மிகவும் பரபரப்பாக எழுதப்பட்ட விஷயத்திற்கு வருவோம்... திருமதி சோனியா காந்தி ஹைதராபாத்திற்கு வந்திருந்த பொழுது, விமான நிலையத்தில் உங்களிடம் கூறிய வார்த்தைகள் என்ன?

உபேந்திரா: அந்தக் கசப்பான சம்பவத்தைப் பற்றிப் பேசவே தயங்குகிறேன். அது எனக்கு மிகவும் வேதனை தந்த சம்பவமாகும். அவர் ஏன் என்னிடம் அவ்வாறு கடுமையாக — அப்படியொரு தொனியில் பேசினார் என்று எனக்கு இன்னமும் புரியவில்லை. ஏனெனில், தனிப்பட்ட முறையில் நான் அவருக்கு எதிராக ஒன்றுமே பேசியது இடையாது.

கேள்வி: திருமதி சோனியா அப்படி என்னதான் சொன்னார்?

உபேந்திரா: அதேதான்... பத்திரிகைகளில் ஏற்கெனவே வெளிவந்த வார்த்தைகள்தான்... என்னை மிரட்டினார். அருகில் இருந்த எல்லோருமே திருமதி சோனியா அப்படிச் சொன்னதாக ஊர்ஜிதப்படுத்தினார்கள்.

கேள்வி: அவர் சொன்ன வார்த்தைகளை உங்கள் காதாலேயே கேட்டீர்களா அல்லது....?

உபேந்திரா: எனக்கும் காது கேட்டது. அவருக்கு (திருமதி சோனியா) அருகே இருந்த என்னுடைய கட்சி எம். பி. ஒருவர் தாமும் கேட்டதாக ஊர்ஜிதப்படுத்தினார். ஒரு நிமிடத்திற்குள் எல்லாம் முடிந்து விட்டது. நான் ஒன்றுமே பேச முடியாமல் அப்படியே அதிர்ந்து போய் விட்டேன்.

கேள்வி: மிரட்டினார் என்றால்... அவர் உபயோகித்த அந்த வார்த்தைகளைத் திருப்பிச் சொல்ல முடியுமா?

உபேந்திரா: அதேதான்... **'I will see your end if I am alive, for what you have said about me and my family.'** சில காங்கிரஸ் எம். பிக்கள் கூட, திருமதி சோனியா கூறிய தன் இரண்டாவது பகுதியை, அதாவது **...for what you have said about me and my family** என்பதைத் தாங்கள் கேட்டதாக ஒப்புக் கொண்டார்கள். ஆனால் திருமதி சோனியா என்னை மிரட்டினார் என்பதைத்தான் ஒப்புக் கொள்ளவில்லை. **'I will not accept your namaste for what you have said about me'** என்று சொன்னதாகத் தங்கள் காதுகளில் விழுந்ததாகச் சில காங்கிரஸ் எம். பிக்கள் சொன்னார்கள். ஏனெனில் நான் அவருக்குக் கைகூப்பி வணக்கம் சொன்னதற்கு அவர் பதிலுக்கு வணக்கம் சொல்லவில்லை; என்னை முறைப்பாகப் பார்த்தார். ஆனால் இன்னமும் எனக்கு, அவர் என்னிடம் ஏன் அப்படி நடந்து கொண்டார் என்பது புரியவில்லை. ஒருவேளை வேறு யாராவது அவரைப் பற்றிச் சொன்னவற்றை நான்

சொன்னதாகத் தவருகப் புரிந்து கொண்டிருப்பரோ என்று தோன்றுகிறது. ஆனல் அவரோ, தாம் வேறு ஓர் உறுப்பினரைப் பற்றிச் சொன்னதாகக் கூட ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை... அதைச் செய்திருந்தால் அது ஓர் உரிமைப் பிரச்னையில் போய்முடிந்திருக்கக்கூடும். அதனல் அவரால் வேறு ஒருவர் பெயரை இழுக்க முடியாமல் போயிருக்கலாம். திருமதி சோனியா அன்றைக்கே ஏதாவது விளக்கமோ அல்லது மறுப்போ தெரிவித்திருந்தால் கூட நான் அந்தச் சம்பவத்தை அப்படியே மறந்திருப்பேன். இந்த விஷயத்தில் ஆந்திர கவர்னரும் ரொம்ப வேடிக்கையாக நடந்து கொண்டார். திருமதி சோனியாவை நிருபர்கள் சந்திக்க விடாது, அப்படியே விமானத்தில் ஏற்றி விட்டார். அவருக்கு விளக்கம் கொடுக்க ஒரு வாய்ப்புக் கொடுத்திருந்தால், விஷயம் இவ்வளவு தூரத்திற்குப் போயிருக்காது. எனக்கும் ஒரு மனக்கசப்பு ஏற்பட்டிருக்காது. பொது வாழ்வில் இருப்பவர்களுக்குச் சில நல்ல நடத்தைகள் இருக்க வேண்டும் என்று நினைப்பவன் நான். என்னுடைய சண்டையெல்லாம் ராஜீவ் காந்தியுடனும், அவருடைய காங்கிரஸ் கட்சியுடனும்தான். அவருடைய குடும்பத்தையெல்லாம் நான் எதற்கு அனவசியமாக வம்புக்கு இழுக்கப் போகிறேன்! அரசியல் பூசல்களுக்காக என்னுடைய குடும்பத்தை யாராவது இழுப்பதும் எனக்குப் பிடிக்காது.

கேள்வி: பிரதம மந்திரி இவ்விஷயத்தைப் பற்றி ஏதாவது சொன்னரா?

உபேந்திரா: அவர் ஹைதராபாத்திலேயே, 'எனக்கு என் மனைவியை நன்கு தெரியும். அவள் அப்படியெல்லாம் யாரையும் மிரட்டுபவள் அல்ல!' என்று சொல்லி விட்டார்.

கேள்வி: சமீபத்தில் மாநிலங்களவையில் ஆந்திர கவர்னர் குமுத்பென் ஜோஷியின் அதிகப்படியான செலவைப் பற்றி நீங்கள் குறிப்பிட்டதைத் தொடர்ந்து ஆளும் கட்சி அமைச்சர்களுக்கும், அவைத் தலைவர் டாக்டர் சங்கர் தயாள் சர்மாவுக்கும் இடையே நடந்த மோதலைப் பற்றி...?

உபேந்திரா: அது ஒரு துரதிர்ஷ்டமான சம்பவம். ஆளும் கட்சி பாராளுமன்றத்திற்குத் தகுந்த கௌரவம் அளிப்பதில்லை என்று நான் ஏற்கெனவே குறிப்பிட்டதை ஊர்ஜிதப்படுத்தும் பல சம்பவங்களில் இதுவும் ஒன்று. ஒரு மணி நேரத்திற்குத் 'தமாஷா' நடந்து கொண்டிருந்தது. பிரதமர், தம் அமைச்சர்கள் கூச்சல் போடுவதைத் தடுக்கவோ, அவைத் தலைவருடன் ஒத்துழைக்கவோ முயற்சி செய்யவில்லை. அவைத் தலைவர் நின்று கொண்டிருக்கையில் திரு. ராஜீவ் காந்தி சபை மரபிற்கு மாருகச் சபையை விட்டு வெளியேறி விட்டார். சரித்திரத்திலேயே முதல் தடவையாக ஓர் உபஜனதிபதி தம்முடைய பதவியை ராஜினமா செய்யத் தயார் என்று சொல்லும் அளவுக்கு ஆளும் கட்சி அமைச்சர்கள் நடந்து கொண்டார்கள். குறைந்த பட்சம் திரு. ராஜீவ் காந்தி தம்முடைய அமைச்சர்களின் நடத்தைக்காகச் சபையின் மன்னிப்பையாவது கோரியிருக்கலாம்.

கேள்வி: கடைசியாக, அண்மையில் தெலுங்கு தேச பாராளுமன்ற உறுப்பினரான சிந்தா மோகன் தமது பதவியிலிருந்தும், கட்சியிலிருந்தும் திடீரென்று ராஜினமாச் செய்தார். என். டி. ராமராவ் மற்றும் அவர் குடும்பத்தினரின் அதிகார துஷ்பிரயோகமும், சர்வாதிகாரமும்தான் தாம் கட்சியை விட்டு விலகுவதற்கான காரணங்கள் என்று கூறியிருக்கிருர். அதைப் பற்றி நீங்கள் ஏதாவது சொல்ல விரும்புகிறீர்களா?

உபேந்திரா: திரு. சிந்தா மோகன் புதிதாக ஒன்றும் சொல்லிவிடவில்லை. நாதல பாஸ்கர்ராவ், சீனிவாச ரெட்டி போன்றவர்களும், காங்கிரஸ் கட்சியினரும் சொல்லும் ஆதாரமற்ற புகார்களையேதான் அவரும் சொல்கிருர். இதற்கெல்லாம் மக்கள் சொல்வதுதான் சரியான தீர்ப்பு. மக்களுக்கு — குறிப்பாக ஏழை மக்களுக்கு — என். டி. ஆரின் மீது நம்பிக்கை இருக்கிறது. மேலும் திரு. சிந்தா மோகன் என். டி. ஆரிடமோ, பாராளுமன்றக் கட்சிக் கூட்டங்களிலோ இதற்கு முன்பு இந்த விஷயங்களைப் பற்றிச் சொன்னதில்லை. உயர்நீதிமன்றத் தீர்ப்பிற்குப் பிறகு என். டி. ஆரைத் தாம் ராஜினமாச் செய்யச் சொன்னதாகத் திரு. சிந்தா மோகன் சொல்வதெல்லாம் சுத்தப் பொய். அவருக்கு அப்படியெல்லாம் என். டி. ஆர். எதிரில் பேசும் துணிச்சல் கிடையாது. இதற்கு முன்னல் என். டி. ஆரை எதிர்த்த சீனிவாச ரெட்டியும், பாஸ்கர் ராவும் இன்று முகவரி தெரியாமல் போய்விட்டார்கள். திரு. சிந்தா மோகனுக்கும் அதே கதிதான். தம்முடைய நல்ல எதிர்காலத்தைத் தாமே அழித்துக் கொண்டுவிட்டார் என்றுதான் சொல்வேன்.

பேட்டி: ரமாமணி சுந்தர்

புகைப்படங்கள்: ஜி. அருண்



"நம்மராமசாமி, எதிலேயுமேரொம்பச் சிக்கனம்."

"அப்படியா...?"

"ஆமாம்; பாருங்களேன், அவர் பெண் கல்யாணத்தை 'ஐந்நூறு பொய்' சொல்லியே முடிச்சிட்டார்"

— ஆர். வசந்தகுமார்.

# "சுவையுடன் வளர ராசிபலன் சொல்கிறது ஃபாரெக்ஸ்"

நீங்கள் ராசிபலனை நம்புகிறவர்களானால் மேஷ ராசியில் பிறந்த உங்கள் குழந்தை மற்றவர்களைவிட வேகமாக நடக்கவும் பேசவும் தொடங்குவதைப் பார்ப்பீர்கள். எளிதில் உணர்ச்சி வசப்படும் மேஷக் குழந்தை துடிப்பானது. அதனிடம் கண்டிப்பாக இல்லையென்றால் அடம்பிடித்து ரகளை செய்யும். நீங்களே எதிர்பார்க்காத நேரங்களில் உங்களை கட்டிப்பிடித்து மகிழவைக்கும்.




ராசிபலன்களை நம்பினாலும், நம்பாவிட்டாலும் குழந்தையின் போஷாக்கு என்றால் முழு நம்பிக்கைக்கும் பாத்திரமானது ஃபாரெக்ஸ்.

4-வது மாதம் முதல் உங்கள் கண்மணிக்கு பாலடங்கிய ஃபாரெக்ஸை ஊட்டுங்கள். இது முழுமையான ஆடைப்பாலிலிருந்து தயாராவதால் குழந்தை நன்கு வளரத் தேவையான கால்ஷியம் தாது உப்புக்கள், புரதம், வைட்டமின்கள், கோதுமைத்தானியம் அனைத்தும் உள்ளடக்கியது.

6-வது மாதம் முதல் ஃபாரெக்ஸ்-வெஜ் ஊட்டுங்கள். இது ருசியுடன் கூடிய ஊட்டச் சத்துக்களடங்கியது.









சுவையுடன் வளரும் வழி

GX/43/213 TML

# பரிட்சை நெருங்கிடும் காலம்? கவனமாக படித்திடும் நேரம்



முழுதும்
தயாராயிருந்திட
வேண்டிய காலம்
**காம்ப்ளான்**®
பருக வேண்டிய
நேரம்.

## காம்ப்ளான்® ஒன்றில்தான் அவனுக்கு தேவையான அதி ஊட்டமளிக்கும் 23 மூலாதார சத்துணவுகள் உள்ளன.

குழந்தைகள், முக்கியமாக பரிட்சைக்கு படிக்கும் காலத்தில், திடமாக இருந்திடுவது அவசியம். அதனால்தான் பரிட்சை நடக்கும் நேரம் **காம்ப்ளான்** நேரம் என்று அன்னையர் அறிவர்.

<u>உடல் வளர்ச்சியில் பங்கு பெறுவதே புரதம் என்ற சத்துதான்.</u> **காம்ப்ளானில்** குழந்தைகளுக்குத் தேவையான புரதம் (20%) இருப்பது மட்டுமல்ல, அப்புரதம் மிகச்சிறந்த புரதமுமாகும் (பால் புரதம்). அத்துடன், அது குழந்தைகளுக்கு தேவையான அதி ஊட்டமளிக்கும் கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்புச்சத்து, வைட்டமின்கள், தாதுக்கள் ஆகிய 22 கூடுதல் மூலாதார சத்துணவுகள் கொண்டதாகும்.

துவங்குங்கள் **காம்ப்ளான்** உங்கள் குழந்தைகளுக்கு—அன்றாடம் இருவேளை.

**காம்ப்ளான் கிடைக்கிறது** இனிய சுவைகளாம் சாக்கலேட், ஏலக்காய்—குங்குமப்பூ, ஐஸ்க்ரீம், ஸ்ட்ராபெர்ரியும், சாதா ரகத்திலும்.

குழந்தைகள் மிகவும் விரும்பிடும் சுவைகள்.




# காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூரண உணவு

GX/22/203 TML



# பெண்மணி அவள் கண்மணி

அடுத்தவர் விவகாரத்தில் மூக்கை நீட்டியதால் குடி இருந்த வீட்டைக் காலி செய்ய நேர்ந்து, வேறு ஒரு காலனி வீட்டில் வந்து குடியேறுகிறார் விசு. உடன் அவருக்கு அடங்கிய மகன் பிரதாப். மருமகள் குட்டி பத்மினி. பேரக் குழந்தைகள் இருவர்.

புதிதாக வந்து குடியேறிய இடத்திலாவது தட்டில் விழுந்த சாப்பாட்டைச் சாப்பிட்டு விட்டுச் சும்மா இருக்க வேண்டியதுதானே? ஒரு காதைப் பிய்த்து ஒரு வீட்டு ஜன்னலில் கொண்டு போய் வைத்து விடுகிறார். ஒரு கண்ணைக் கொண்டு போய் இன்னொரு வீட்டு உள்ளறையில் பதித்து விட்டு வந்து விடுகிறார். இப்படியாகத் தானே வந்த இடத்திலும் வம்பு ஆரம்பிக்கிறது.

வரதட்சணை (எத்தனை நாளைக்கு இந்தப் பிரச்னை? புளித்துப் போய் விட்டது!) கொண்டு வராத மருமகளின் கருவைக் கலைக்கச் சொல்லி உத்தரவிடும் கொடுமைக்கார மாமியார்; மாமனார், மாமியாரை வேலைக்காரர்களை விடக் கேவலமாக நடத்தும் ஒரு பத்திரிகை ரிப்போர்ட்டர் மருமகள்; மகனும் தந்தையுமாகக் குடித்து விட்டுக் குடும்பத்தைக் கவனிக்காமல் சுற்ற, அவதிப்படும் குடிகாரக் கணவனின் மனைவியும் அவனுடைய மருமகளும்.

இந்த மூன்று குடும்பங்களுக்கிடையில் விசு நுழைந்து, குட்டுப்பட்டு, ஆந்தை விழி விழித்து, கடைசியில் மூன்று குடும்பங்களையும் ஒரு வழியாக்குவதுதான் கதை.

'குடிக்கக் காசு தரமாட்டேன், ஆனா சாப்பாடு கேளுங்க, வாங்கித் தரேன்' என்று சொல்லிவிட்டுக் குடிகாரர்களுடன் அசைவ ஹோட்டலில் நுழைந்து விட்டு, அவர்கள் முட்டை, சிக்கன், மட்டன் என்று அடிக்க, விசு ஒரே ஒரு கப் டீயுடன் எழுந்து கொண்டு காசை எண்ணிப் பார்த்தால்... பில் தொகைக்குக் கையிருப்பு உதைக்கிறது. வேறு வழியின்றி சர்வர் வேலைக்காக ட்ரேயைத் தூக்க, கோழி முட்டைக் கண்ணாடி அணிந்த மகன் பிரதாப், அதே ஹோட்டலுக்கு வந்து சேர... சரியான கலகல.

பிரதாப்புக்கு அருமையான காரெக்டர். அப்பாவின் மீதிருக்கும் அபார அன்பு காரணமாக அவரைக் கடிந்து கொள்ளவும் முடியாமல், காலனியில் இருப்பவர்கள் திட்டுவதைப் பொறுத்துக் கொள்ளவும் முடியாமல்... அஞ்ஞாதவாசத்திற்குப் பிறகு பிரதாப் நன்றாகவே மின்னுகிறார்.

அட, அருணா மனோரமாவின் மகளாமே! அந்த சின்ன சஸ்பென்ஸ் தெரியவரும் போது வியப்பாகத்தானிருக்கிறது. மனோரமாவிற்குக் கடுகளவு பாத்திரம். பரவாயில்லை. ஒப்பேற்றி இருக்கிறார்.

இரண்டு மூன்று காட்சிகளில் வந்தாலும் 'நாளைக்குக் காலையில போயிடறேன்' டெல்லிகணேஷ், மனத்தில் ஒட்டிக் கொண்டு விட்டார்.

மலைப்பிரதேசத்தில் சீதாவும் திலீப்பும் முதலில் ஒரு பாட்டுப் பாடுகிறார்கள். படம் ரப்பரோ என்று எண்ண வைக்கிறது. கடைசியில் அதே மலைப்பிரதேசத்தில் சீதா அதே பாட்டை க்ளைமாக்ஸிற்காகப் பாடுகிறார். வெகு இயல்பாக இருந்த படத்தில் சினிமாத்தனம் புகுந்து விடுகிறது.

விசு, முதியோர் இல்லத்திற்குப் போய்ப் பாடும் பாட்டு, படத்தின் நீளத்திற்காகத்தான் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. இருந்தாலும் சிரிக்க வைக்கிறாரே, பொறுத்துக் கொள்ளலாம்.

கடைசியில் பிரதாப் அப்பாவின் கட்சிக்கு மாறி விடுவது, அடுத்த காலனிக்குப் போக அவரே பரபரப்பது...

விசுவுக்கு இந்த மாதிரி ஸப்ஜெக்டுகளை வைத்துக் கொண்டு ஒரு நல்ல படத்தைத் தருவது எப்படி என்று தெளிவாகப் புரிந்திருக்கிறது. தந்திருக்கிறார்.

தியேட்டரில் நுழைந்தால் நிச்சயம் சிரித்து விட்டு, ரசித்து விட்டு வெளியே வரலாம்.

— ஜெயமன்மதன்



ஆறுதெளா தீர்த்தருரம்பத்திலே.. எதிர்க்கட்சிகள் 30 கோடி..
ஆளுங்கட்சியில் சிலர் 40 கோடி.. மர்மச்சாமியார் பல கோடி..
இல்லை.. மர்மச்சாமியார் இல்லை... எல்லாம் பலப் பல பல பல கோடி..
மற்றது நானே...

ஜைல் சிங்

ஆளும் கட்சி

எதிர்க் கட்சிகள்









ஜானகி அரசு முடிவில்..
ஆளுநர் மாற்றம்... காவேரி
தண்ணீர்.. போலீஸ் மாற்றம்..
ஹஜ் யாத்திரை சலுகை...
எல்லாம் நான் சொல்லி
ராஜீவ் செய்தார்.. ஆனால்
இப்ப அவர் என்னைப் பார்க்க
ஏன் மறுத்தாருங்கறதை
மாத்திரம் கேக்காதீங்க!



கல்கி

1988 மார்ச் 27
மலர் 46 இதழ் 35
பிரபவ பங்குனி 14



# நரித்தனத்திலிருந்து நாடு தப்பியது!

எதிர்க்கட்சிகள் விழிப்புடன் இருந்து செயல்பட்டதால் நாம் பிழைத்தோம்; இல்லையென்றால் மத்திய அரசு நம் தலையில் மிளகாய் அரைத்திருக்கும்!

பஞ்சாபின் பயங்கரவாதத்தையும் பிரிவினை வாதத்தையும் ஒடுக்க, மத்திய அரசுக்கு ஏற்கெனவே உள்ள அதிகாரங்கள் போதவில்லையாம்! தேசிய பாதுகாப்புச் சட்டம் என்பதாக ஒன்றிருக்கிறது; அது மலை போன்ற அதிகாரங்களை அரசிடம் குவித்திருக்கிறது. இதுதவிர, இந்தியாவின் எந்தப் பகுதியிலாவது ஆயுதமேந்திய புரட்சி இருக்கிறது என்றால் அதனைச் சமாளிக்க அப்பகுதியில் எமர்ஜென்ஸி கொண்டு வரலாம் என்று அரசியல் சாசனத்திலேயே வழிவகுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இவை மத்திய அரசுக்குப் போதவில்லை! 'உள்நாட்டுக் கலவரம் இருந்தால் கூட எமர்ஜென்ஸி கொண்டு வரலாம்' என்று அரசியல் சாசனத்துக்குத் திருத்தம் கொண்டுவரப் பார்த்தது அரசு!

இந்தத் திருத்தத்தை, பஞ்சாப் பிரச்னையை மனத்தில் கொண்டே நிறைவேற்ற விரும்புவதாக மத்திய அரசு சொன்ன போதிலும், நாடாளுமன்றத்தில் அது சமர்ப்பித்த மசோதாவில் அவ்வாறு இல்லை! 'இந்தியாவின் எந்தப் பகுதியில் உள்நாட்டுக் கலவரம் தோன்றினாலும் எமர்ஜென்ஸி கொண்டு வரலாம்' என்றுதான் மசோதாவில் காணப்பட்டது!

எதிர்க்கட்சிகள் கொஞ்சம் அசந்திருந்தால் இந்த மசோதா அப்படியே சட்டமாகியிருக்கும். அப்புறம் நாட்டின் எந்த மூலை முடுக்கிலாவது ராஜீவ் அரசை எதிர்த்து யாராவது வாய் திறந்தால் கூடப் போதும், 'உள்நாட்டுக் கலவரம்' என்று முத்திரை குத்தி, அப்பகுதியில் எமர்ஜென்ஸி கொண்டு வந்து விடலாம்! நல்லவேளையாக எதிர்க்கட்சிகள் இந்த நரித்தனத்தில் ஏமாறவில்லை. எச்சரிக்கையாக இருந்து சாசனத் திருத்த மசோதாவைக் கடுமையாக எதிர்த்தன.

இந்திரா காந்தி கொண்டு வந்த எமர்ஜென்ஸியும் அதன் பின்விளைவுகளும் நமக்கு நன்றாக நினைவிருக்கின்றன. எமர்ஜென்ஸி என்ற பெயரில் ஜனநாயகத்தை ஒழித்து, சர்வாதிகாரத்துக்கு வழி வகுக்கிற கொடுமையை மறுபடி இந்த நாடு எப்போதுமே சந்திக்கக் கூடாது என்ற நோக்கில்தான் ஜனதா அரசு, ஆயுதம் தாங்கிய புரட்சி இருந்தால் மட்டுமே, அந்தப் பகுதியில் மட்டுமே, எமர்ஜென்ஸி கொண்டு வரலாம் என்று அரசியல் சாசனத்தில் திருத்தம் செய்தது. இப்போது அந்த ஆரோக்கியமான திருத்தத்தைத் தூக்கி எறிந்து விட்டு, மீண்டும் தான்தோன்றித்தனமாக எமர்ஜென்ஸி கொண்டு வர வழிவகுக்க முயன்றது மத்திய அரசு. ஆனால் எதிர்க்கட்சிகளின் பலமான தாக்குதல் காரணமாக, வேறு வழியின்றி, பஞ்சாபில் மட்டுமே உள்நாட்டுக் கலவரத்தை ஒடுக்க எமர்ஜென்ஸி அதிகாரம் பயன்படுத்தப்படும் என்பதாகத் திருத்த மசோதாவில் ஒரு திருத்தம் செய்து மத்திய அரசு நிறைவேற்றியுள்ளது.

அளவுக்கு மீறிய அதிகாரங்களை மத்திய அரசிடம் குவிக்கிற, மக்களை அடிமைப் படுத்துகிற, இதுபோன்ற ஒரு சாசனத் திருத்தத்தை விவாதிக்கப் போதிய அவகாசம் அளிக்காமலும் தேர்வுக் கமிட்டி பரிசீலனைக்கு விடாமலும் அவசரம் அவசரமாக நிறைவேற்றுவதே குற்றம் என்றால், பஞ்சாபின் பெயரால், நாடெங்கும், 'உம்'மென்றால் எமர்ஜென்ஸி கொண்டு வரும் அதிகாரங்களைப் பெறப் பார்த்தது மிகப் பெரிய மோசடி! எதிர்க்கட்சிகள் ஜனநாயகத்தில் எவ்வாறு சிறப்புப் பணி ஆற்ற முடியும் என்பதற்கு நாடாளுமன்றத்தில் இந்த மசோதா தொடர்பாக நடந்த சம்பவங்கள் அற்புதமான எடுத்துக்காட்டு.

இது ஒருபுறமிருக்க, பஞ்சாபுக்குக் கூட இந்தப் புதிய கூடுதல் எமர்ஜென்ஸி அதிகாரங்கள் தேவையில்லை என்ற எதிர்க்கட்சிகளின் கருத்து முற்றிலும் சரியானது. மத்திய அரசின் சர்வாதிகாரப் போக்கு, பஞ்சாபில் மிதவாதிகளைக் கூடத் தீவிரவாதிகளாக உருமாற்றும். வெறுப்பையும் வன்மத்தையும் வளர்க்கும். ஆயுத பலத்தைப் பயங்கரவாதிகள் மீது பிரயோகிக்கும் போதே, அரசியல் தீர்வுக்கும் மற்றொரு பக்கம் வழிகாண வேண்டும். ஆனால், நேற்று கைது செய்தவர்களை இன்று விடுவிப்பதும் கூடவே, எமர்ஜென்ஸி அதிகாரங்களைப் பெறுவதுமான ராஜீவ் அரசின் போக்கு குழப்பமான சிந்தனையையே உணர்த்துகிறது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.




# எல்லாத் தம்பதியும் பாராயணம் செய்ய வேண்டும்!

* 'முறிந்து போன திருமணங்கள்' கவர் ஸ்டோரி படித்தேன். ஆண், பெண் இருவரும் படித்து, வேலைக்குச் சென்று சம்பாதிப்பதால் திருமணத்திற்குப் பிறகு விட்டுக் கொடுக்கும் தன்மையை விடுத்துச் 'சுய கௌரவம்' பார்க்கிறார்கள். அதுதான் விவாகரத்துக்கு வழிகோலுகிறது. அந்த எண்ணத்தில் பிரிந்தவர்கள் தங்களின் கட்டுரையைப் படித்தால் நிச்சயம் சிந்திப்பார்கள்!

மயிலாடுதுறை, கி. எழில்.

* கவர் ஸ்டோரி வாழ்க்கைக்கு இன்றியமையாத பல உண்மைகளை விளக்கியது. 'இதமான ஒரு சொல், ஒரு பாசப் புன்னகை, மனம் வருந்தி உகுக்கப்படும் ஒரு சொட்டுக் கண்ணீர், நீள்கின்ற நேசக்கரம் — இவை எத்தனையோ இடையூறுகளை நீக்குகின்றன' எனும் வரிகள் ஜொலித்தன! திருமணத்தை எதிர்நோக்கும் என் போன்ற இலட்சக்கணக்கான இளைஞர்களின் சார்பில் கல்கிக்கு எங்கள் நெஞ்சார்ந்த நன்றிகள்.

சென்னை — 15.
இரா. சி. இரஞ்சன்.

* அன்பு, அரவணைப்பு, அனுசரித்து நடத்தல் — இவை கணவன், மனைவியருக்குள், இருந்து விட்டால் டைவர்ஸாவது? பிரச்னையாவது? என்பதைச் சொல்லும் 'கவர் ஸ்டோரி'யின் கடைசி ஏழெட்டு வரிகளை எல்லாக் கணவன், மனைவிகளும் பாராயணம் செய்ய வேண்டும்.

குத்தாலம், எஸ். ராஜா.

* மத்திய அரசின் பட்ஜெட்டில் காணப்படும் ஓட்டை உடைசல்களைப் 'பட்ஜெட் என்னும் பணங்காட்டு நரி' என்ற தங்களின் இவ்வாரத் தலையங்கம் பிட்டு, பிட்டு வைத்து, பட்ஜெட் தயாரிப்பில் மத்திய அரசு நடத்தியுள்ள கபட நாடகத்தினைத் தோலுரித்துக் காட்டியது.

தோட்டக்குறிச்சி,
இரா. வரையாபதி.

* பெற்றோர் செய்யும் தவறு குழந்தைகளை எந்த அளவுக்குப் பாதிக்கிறது என்பதைத் தெளிவாக விளக்கி விட்டது, தமயந்தியின், 'அவர்களைக் காப்பாற்ற வேண்டும்' சிறுகதை.

கோவை, உமார்த்தி.

* 'கொடியேற்றம்' போன்ற எழுச்சியூட்டும் சிறுகதைகளை அடிக்கடி வெளியிடுங்கள் சார். தேசிய உணர்ச்சி, நாட்டுப் பற்று என்பதெல்லாம் என்னவென்று உணர முடியாதபடி மரத்துப் போயிருக்கும் சமுதாயத்திற்கு இனியாவது விழிப்பு ஏற்படட்டும் ப்ளீஸ்! அதை எழுதிய வையவனுக்குப் பாராட்டுக்கள்.

கோவிந்தபுத்தூர்,
குரு. வைத்தியநாதன்.

* ஜெயபாலன் எழுதிய 'எண்ணத்தில்தான் இருக்கு' சிறுகதை என்னை நெகிழ வைத்தது. இளம் பிராயத்தின், தவறான தாழ்வு மனப்பான்மை, உணவையே துறக்கும் பிடிவாதம், போன்ற குணங்களையும் ஒரு தந்தையின் ஸ்தானத்தில் நின்று, அவனது போக்கிலேயே அவனைத் திருத்திய தமிழவ்வாவின் அன்புப் பணியை அற்புதமாகச் சித்தரித்துக் காட்டியது கதை.

இராணிப்பேட்டை,
பேப்பர் கார்த்திக்.




* இருமுறை படிக்கத் தூண்டும் வகையில் அமைந்திருந்தது சேர்ஷேந்து முகர்ஜியின் 'மீண்டும்...' சிறுகதை. அன்னாரின் வங்காளப் படைப்பினை மிக அழகாகத் தமிழில் மொழிபெயர்ப்புச் செய்திருந்த ஆசிரியர் சு. கிருஷ்ண மூர்த்தியை எவ்வளவு பாராட்டினாலும் தகும்!

மதுரை — 1. பி. எஸ். பரமசிவம்.

* 'கதரின் சிறப்பில் ஏழையின் சிரிப்பு!' பேட்டி படித்தேன். கதர் உடுத்திக் கொண்டிருக்கும் ஒரு பெண்ணிடம் வரதட்சணை வாங்க எந்த ஒரு வரனுக்கும் மனம் வராது என்று உறுதியாக நம்பும் தாராவின் கருத்து மெய்சிலிர்க்க வைத்தது.

சீர்காழி,
சன்பை. சி. சண்முகம்.

* விவசாயிகள் நலனில் அக்கறை காட்டி, அவர்களுக்காக உழைக்கும் மகேந்தர் சிங் திகைத் உண்மையிலேயே இந்திய மக்கள் அனைவருடைய பாராட்டுதலுக்கும் உரியவர்தான்.

திருக்கடையூர்,
இராம. செந்தில்குமார்.

* 'வாங்கும் கடன் வட்டிக்கே போதாது' என்ற கட்டுரை நல்லவர்களின் சிந்தனையை நிச்சயம் தூண்டிவிடும். நமது நிலை குறித்த நியாயமான கவலையைக் கட்டுரை எழுப்பியிருக்கிறது.

விழுப்புரம், எம். நடராஜ்.

* ஆர். கே. லட்சுமண் அவர்களின் பேட்டி அருமை. நம் நாட்டின் தற்போதைய நிலைமை, நம் தலைவர்களின் போக்குகள், போடும் வேஷங்கள், இவற்றின் மீது அவர் ஏற்படுத்திக் கொண்டிருக்கும் வெறுப்பு நியாயமானதே. அவர் சொல்வது போல், நாட்டை ஒருமுறை ஒட்டடை அடிப்பதே சாலச் சிறந்தது.

சென்னை — 41. ராகவன்.

* 'உரிமை கீதம்' படத்தில் சிறப்பான முறையில் நடித்திருக்கும் பிரபு, கார்த்திக் இருவரது நடிப்பைப் பற்றியும் ஒரு வார்த்தை கூடக் குறிப்பிடவில்லையே, ஏன்?

கோவை — 1. ஆர். ஆறுமுகம்.

* கவிஞர் மு. மேத்தாவின் 'மாறிய மதுரைகள்' — கவிதை அக்னியாய்ச் சுட்டது. வரதட்சணைக் கொடுமையை, இதை விடச் சிறப்பாகச் சொல்ல முடியாது.

மதுரை,
ரம்யா ராஜேஷ் பிரியன்.

# க்ளூகோன்-டி ஸூப்பர்ஹீரோ.

களைப்பூட்டும்
வெய்யிலிலும்
களிப்பூட்டும்
சக்திப்பெருக்கு.




களைப்பூட்டும் வெய்யில் நாளிலே உங்கள் குழந்தைக்குத் தேவை க்ளூகோன்-டி. இது, விட்டமின்-டி மற்றும் கால்ஸியம் ஃபாஸ்ஃபேட்டுகள் அடங்கிய உடனடி சக்திபானம்.

பழரசம், தேநீர், காப்பி அல்லது தண்ணீரிலே க்ளூகோன்-டி சேர்த்தால், அது குடும்பத்தினர் அனைவர்க்குமே புத்துணர்ச்சி தரும் பானமாக அமைகிறது. 100, 200, 500 கிராம் பேக்குகளில் கிடைக்கிறது.

**க்ளூகோன்-டி**

ஸூப்பர்ஹீரோவின் சக்திபானம்.

HTA 1649




ஆகாயம் ஸ்லோமோஷனில் நிறம் மாறிக் கொண்டிருந்தது. நகரத்தின் கட்டடங்களின் தலையில் கொண்டை ஊசிகளாய்க் குத்தப்பட்டிருக்கும் தொலைக்காட்சி ஆண்டெனாக்கள் மாலைநேரக் கடமைக்குத் தயாராயின.

தீபக், இம்ப்பீரியல் ஹோட்டலின் முகப்பு வளைவுக்குள் தட், தட்டென்று பைக் அதிர நுழைந்து நிறுத்தினான். ஹெல்மெட்டைக் கழற்றி விட்டு, படிந்து போயிருந்த தலை முடிகளுக்குள் குசுகுசுப்புச் செய்து கொண்டு, ரிசப்ஷன் பகுதிக்குச் சென்றான்.

அங்கிருந்த இளைஞன் மற்றவனிடம் என்ன இருந்தாலும் ஹாலிவுட், ஹாலிவுட்தான் என்று சிலபல உதாரணங்களுடன் சூடாகப் பேசிக் கொண்டிருந்தவன் குரலைத் தாழ்த்தி, ''யெஸ்'' என்றான் இவனைப் பார்த்து.

''கொஞ்சம் முன்னாடி இங்கே நிவிதான்னு ஒரு பொண்ணு வந்திச்சா? என் பேரு ஹரி. இங்கே சந்திக்கிறதாப் பேச்சு. வரச் சொல்லியிருந்தேன். அதான்...''

''யாரும் வரலை சார் அப்படி...''

அங்கிருந்த ஸோபா, நாற்காலிகளில் ஒரு குண்டான மனிதர் தொடையை ஆட்டிக் கொண்டே மாலைச் செய்தித்தாள் வாசித்துக் கொண்டிருக்க... அவரைத் தவிர அந்த ஹாலில் வேறு யாரும் இல்லை.

தீபக் ஒரு நாற்காலியில் கொஞ்ச நேரம் அமர்ந்து இருந்துவிட்டு, கைக்கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டு எழுந்தான்.

மறுபடியும் அந்த ரிசப்ஷன் இளைஞனிடம் வந்து, ''எக்ஸ்க்யூஸ் மீ. இந்த ஹெல்மெட்டை வாங்கி உள்ளே வச்சிக்கங்க. நான் ரெஸ்ட்டாரெண்ட் போய் டிஃபன் சாப்பிட்டுட்டு வந்துடறேன்'' என்றான்.

''ஓ.. யெஸ்'' என்று புன்சிரிப்போடு வாங்கிக் கொண்டான்.

''நான் வர்றதுக்குள்ளே அந்தப் பொண்ணு இங்கே வந்தா...''

''நீங்க ரெஸ்ட்டாரெண்ட்ல இருக்கீங்கன்னு சொல்லி அங்கே அனுப்பி வைக்கணும். அதானே சார்?''

''ஆமாம். தாங்க் யூ.''

தீபக் ரிசப்ஷனை விட்டு வெளியேறிச் சற்றுத் தள்ளி இருந்த ஹோட்டலின் ரெஸ்ட்டாரெண்ட் பகுதிக்கு வந்தான். கனமான கண்ணாடிக் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே வந்தான். சன்னமாகக் குளிரும், சங்கீதமும் அலைந்து கொண்டிருந்தன. குறைக்கப்பட்ட வெளிச்சத்தில் மேஜை, மேஜையாய்ச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

வாசல் பகுதியைத் தெளிவாகப் பார்க்கத் தோதான இருக்கையைத் தேர்ந்தெடுத்துச் சென்று அமர்ந்து மெனு கார்டைப் புரட்டினான். வந்த வெயிட்டரிடம் சிலவற்றை ஆர்டர் செய்துவிட்டு மீண்டும் மெனு கார்டைப் பார்த்தான். பத்து வினாடிகளுக்கு ஒரு தரம் வாசலைப் பார்த்துக் கொண்டான்.

ஹோட்டல் வாசலில் ஆட்டோவில் இருந்து இறங்கிக் கொண்டதும் நிவிதாவை மறுபடியும் கேள்விகள் சூழ்ந்து கொண்டன.

எவனோ முகம் தெரியாத, அறிமுகம் இல்லாதவன் என் வினோத்குமாரைப் பற்றி எதுவோ சொல்கிறேன் என்றதும், அவனைச் சந்திக்க வந்திருக்கிறேனே, இது சரிதானா?

''பெங்களூர் போறீங்களாம்மா?'' என்றான் ஒரு டிக்கெட் புரோக்கர். போர்டு முழுக்க ஊர்ப் பெயர்களாக எழுதி வைத்துக் கொண்டிருந்த தனியார் சொகுசு பஸ் டிராவல் ஏஜெண்ட் கடைகளில் கூட்டமிருந்தது.

இவ்வளவு தூரம் வந்த பிறகு தயங்குவதில் அர்த்தமில்லை, ஏதோ ஆதாரபூர்வமான தகவல் என்றானே, பார்த்து விடலாம்.

நிவிதா ஹோட்டல் வாசலில் இருந்த வாட்ச்மேனிடம் விசாரித்துக் கொண்டு ரிசப்ஷன் பகுதிக்கு நடந்தாள்.

அவனை எனக்குத் தெரியாது. என்னை அவனுக்குத் தெரியும். போய் ஓர் இடத்தில் அமர வேண்டியதுதான். அவனாக வந்து அறி

முகப்படுத்திக் கொண்டு பேசுவான். அது சரி. என்னை எப்படி அவனுக்குத் தெரியும்? என் ஆபீஸ் விலாசம், போன் நம்பர், என் பெயர் எல்லாம் எப்படித் தெரியும்? கேட்க வேண்டும்.

நிவிதா ரிசப்ஷன் ஹாலுக்கு வந்து ஒரு ஸோபாவின் ஓரத்தில் அமர்ந்தாள். மாலைச் செய்தித்தாள் ஆசாமி நிமிர்ந்து பார்த்து விட்டுத் தம் அபிமானத் தலைவர் நேற்றைய கூட்டத்தில் எதிரியை எப்படித் திட்டினார் என்று தொடர்ந்து படிக்க ஆரம்பித்தார்.

நிவிதா அந்த ஹால் முழுக்க ஒரு தடவை பார்வையால் வருடிவிட்டு, கைப்பையி லிருந்து நாவலை எடுத்துக் கொண்ட போது...

ரிசப்ஷன் இளைஞன் அவளிடம் வந்து, ''மன்னித்துக் கொள்ளுங்கள். உங்கள் பெயர் தான் நிவிதாவா?'' என்றான் ஆங்கிலத்தில்.

''ஆமாம்!''

''மிஸ்டர் ஹரி என்பவர் உங்களுக்காகக் காத்திருந்தார். ரெஸ்ட்டாரெண்ட் சென்றுள் ளார். அங்கே உங்களை வரச் சொன்னார்.''

''நன்றி. எப்படிப் போக வேண் டும்?''

அவன் காட்டிய வழியில் நடந்து, கதவைத் தள்ளி உள்ளே வந்து கண்களை இருட்டுக்குப் பழக்கிக் கொண்டு சில விநாடிகள் அப்ப டியே நின்றாள். யாராவது தன்னைக் கைய சைத்து அழைக்கிறார்களா என்று கவனித் தாள்.

எல்லோரும் பிஸியாகச் சாப்பிட்டுக் கொண்டிருக்க, நிவிதா சென்று ஒரு நாற்காலியில் அமர்ந்தாள். ஹோட்ட லுக்குச் சொன்னபடி வந்தவன், இங்கே வரச் சொல்லிக் குறிப்பும் கொடுத்தவன், அவனாக வந்து பேசுவான்.

இப்போது இங்கேதான் இருக்கிறானா, இல்லை வெளியில் போய்விட்டானா?

வரட்டும். வருவான்.

நிவிதா தன் மேஜைக்கு வந்த வெயிட்ட ரிடம் கட்லெட் சொல்லிவிட்டுக் காத்திருந் தாள்.

தீபக் தன் நாற்காலியை விட்டு எழாமல், எந்தப் பரபரப்பும் காட்டாமல் நிதானமாகத் தன் அயிட்டங்களைச் சாப்பிட்டுக் கொண் டிருந்தான். நிவிதா உள்ளே வந்ததை, சற்றுத் தயங்கி விட்டுச் சென்று அமர்ந்ததை, ஆர்டர் சொல்லிவிட்டுக் காத்திருப்பதை எல்லாம் கவனித்து உள்ளுக்குள் சிரித்துக் கொண்டான்.

அவசரமே இல்லாமல் சாப்பிட்டு முடித்து, பில்லுக்குப் பணம் வைத்துப் பாக்கிக்குக் காத்திருந்தான். நான்கு மேஜைகள் தள்ளி நிவிதா கட்லெட்டை மிகவும் மெதுவாகச் சாப்பிட்டுக் கொண்டே, திரும்பித் திரும் பிப் பார்த்துக் கொள்வதைக் கவனித்தான்.

பாக்கி வந்ததும் எழுந்து அவன் பக்கமே திரும்பாமல் நடந்து, கதவைத் தள்ளிக்





**அருள்வாக்கு**

'நம்பண்பாட்டைப்பற்றித்தெரிந்து கொண்டால் பணம் வருமா?' என்று நாம் கேட்டுக் கொண்டிருக்கிறோம். வாஸ்தவத்தில் நாம் பணம் சம்பாதிப்பது, வாழ்க்கை நடத்துவது முதலான ஸகல விஷயங்களும் அந்தப் பண்பாட்டை நாம் பூரணமாகத் தெரிந்து கொண்டு, அனுஷ்டித்து, நிறைவு பெற வேண்டும் என்பதற்குத்தான். என்ன காரணத்துக்காக நம் மதத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பது தப்பான கேள்வி. அதற்குக் காரணம், பிரதி பிரயோஜனம் எதிர்பார்ப்பது முழுப் பிசகு. நாம் செய்கிற எல்லாக் காரியங்களுக்கும் பிரயோஜனமாக இருப்பதுதான் மதமே தவிர, இதனால் வேறு பிரயோஜனம் வேண்டும் என்பதில்லை. மதானுஷ்டானத்தால் தான் எல்லாவற்றையும்விட மிகப்பெரிய பிரயோஜனமான சாந்தமும், பிரேமையும், மோக்ஷமும் கிடைக்கிறது என்பதை மறந்துவிட்டு, அதனால் பணம் வருமா; வசதி கிடைக்குமா என்று மட்டும் பார்த்து, 'என்ன பிரயோஜனம்' என்கிறோம். பற்று, பிரேமை இருந்து விட்டால் இப்படிப் பிரதி பிரயோஜனம் எதிர்பார்க்கும் எண்ணமே எழாது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

கொண்டு வெளியேறினான். நேராய் ரிசப்ஷன் பகுதிக்கு வந்தான்.

இப்போது அந்த இளைஞன் ஜப்பான் மாதிரிவராதுஎன்றுஎலெக்ட்ரானிக்சாமான்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்க...

''எக்ஸ்க்யூஸ் மீ. என் ஹெல்மெட்'' என்றான்.

''சார், நீங்க சொன்னவங்க வந்தாங்களே... அனுப்பிச்சேனே... பார்த்துட்டீங்களா?''

''பார்த்துட்டேன். ரொம்ப தேங்க்ஸ் சார்...'' என்று ஹெல்மெட்டைப் பெற்றுக் கொண்டு தனது பைக்கை அடைந்து என்ஜினை இயக்கிப் புறப்பட்டுச் சாலையின் சுறுசுறுப்பான போக்குவரத்தில் இணைந்து கொண்டான் தீபக்.

நிவிதா லேசாகப்பொறுமை இழக்க ஆரம்பித்தாள். சொன்ன நேரத்திற்குச் சரியாய் வந்தாயிற்று. ரிசப்ஷனில் சொன்ன குறிப்புப்படி ரெஸ்ட்டாரெண்ட் பகுதிக்கும் வந்து இருபது நிமிடங்களாயிற்று. எங்கே இன்னும் காணோம்?

''வேறே என்ன வேணும் மேடம்?''

''இன்னும் ஒரு கட்லெட் கொண்டாங்க.''

அடுத்த கட்லெட்டையும் மிகச் சிறுசிறு துண்டுகளாய்ச் சாவகாசமாகச் சாப்பிட்டு, காப்பி சொல்லி, அதையும் துளித் துளியாய்க் குடித்து முடித்தபோது முக்கால் மணி நேரமாகியிருந்தது.

என்ன ஆயிற்று?

நான் வரமாட்டேன் என்று நினைத்தானா? வந்த பிறகு நேரில் பேசத் திடீரென்று துணிவில்லாமல் போய்விட்டதா? ரெஸ்ட்டாரெண்ட்டில் பத்து நிமிடங்கள் இருந்து விட்டுப் புறப்பட்டுப் போய் விட்டானா?

எவ்வளவு நேரம்தான் காத்திருப்பது? மறுபடியும் போய் ரிசப்ஷனில் விசாரிக்கலாமா? தேவையில்லை. வரச் சொல்லி விட்டுச் சந்திக்கத் துணிவில்லாத கோழையைப் பற்றி விசாரிக்கவும் அவசியம் இல்லை. மறுபடியும் தொடர்பு கொண்டு பேசினால் மதித்துப் பேசுவதும்கூட அவசியம் இல்லை.

நிவிதா புறப்பட்டாள். நிதானமாக நடந்தாள். ஹோட்டலை விட்டு வெளியேறி பஸ் ஸ்டாப்பில் சைதாப்பேட்டைக்கான பஸ்ஸுக்காகக் காத்திருந்தாள்.

''வெரிகுட்'' என்றான் ஷியாம்.

வீட்டின் ஹாலில் ஸோபாவில் குப்புறப் படுத்திருந்தான். மேலே சட்டை போடாமல், இடுப்பில் லுங்கி மட்டும் கட்டியிருந்தான். இரண்டு முழங்கைகளை ஊன்றி, தலையை நிமிர்த்திச் சொன்னான்: ''மிச்சத்தை நான் பார்த்துக்கறேன்!''

தீபக் தன் ஷூவைக் கழற்றி ஓரமாக வைத்துக் கொண்டு, ''ஃப்ரிஜ்ஜிலே என்ன வச்சிருக்கே ஷியாம்? சுதேசியா? விதேசியா?'' என்றான்.

''ரெண்டும் இருக்கு. உனக்கு எது வேணுமோ எடுத்துக்கோ.''

தீபக் சென்று வெளிநாட்டு மது பாட்டிலையும், கிளாஸ்களையும் எடுத்து வந்து டீப்பாய் மேல் வைத்துவிட்டு, ''டிரைவர் இருக்கானா?'' என்று கேட்டான்.

''போகச் சொல்லிட்டேன். உனக்கு என்ன வேணும் சொல்லு. வரவழைக்கிறேன்.''

''சிக்கன் சிப்ஸ், ரெண்டு ஆம்ப்பாயில்ட்.''

ஷியாம் டெலிபோன் எடுத்துச் சுழற்றி, ''ஹலோ, வீரனா ஹோட்டலா? நான் ஷியாம் பேசறேங்க. உங்க பையன்கிட்டே சில அயிட்டம்ஸ் சூடா வீட்டுக்குக் கொடுத்தனுப்பறீங்களா? சொல்றேன், குறிச்சிக்

கங்க என்று சொல்லி விட்டு வைத்தான்.

தீபக் தன் முழுக்கைச் சட்டையின் கைப் பகுதிகளைப் பின்னுக்கு இழுத்து விட்டுக் கொண்டு, இரண்டு பட்டன்களைக் கழற்றி விட்டுக் கொண்டு அமர்ந்தான். இரண்டு கிளாஸ்களிலும் சம அளவில் ஊற்றினான்.

''அவ்வளவுதானே? என் ஜோலி முடிஞ்சதில்லையா? இனிமேல் என்னை விட்டுடுவே இல்லே?''

''இல்லையே. இன்னும் ஒரு வேலை இருக்கே தீபக்.''

''என்ன அது?''

''நேத்து வல்லபன்கிட்டே பேசினப்போ நிவிதா என்ன சொன்னா?''

''எந்த வல்லபன்?''

''அதாண்டா ஆத்மா டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் முதலாளி.''

''அவர்கிட்டே நிவிதா எப்பப் பேசினா? எனக்கென்ன தெரியும்?''

''மண்டு! நிவிதா மாதிரி பெண் குரல்ல நீதானே பேசினே?''

''ஸாரிப்பா. மறந்துட்டேன்.''

''நாளைக்கு போன் செய்யறதாச் சொல்லியிருக்கோமே...''

''இப்ப நான் வல்லபன்கிட்டே மறுபடியும் நிவிதா மாதிரி பெண் குரல்லே பேசணும். அவ்வளவுதானே?''

''ஆமாம்.''

''வசனம் என்ன சொல்லு. இப்பவே பேசிடறேன். தண்ணி போட்டதுக்கப்புறம் குரல் பிசிறடிக்கும். குழறும். சரியா வராது.''

ஷியாம் எழுந்து அமர்ந்து டீப்பாய் மேல் இருந்த புத்தகத்தை எடுத்து அதற்குள் இருந்த காகிதத்தை எடுத்து நீட்டினான்.

''இதான் விஷயம். பேச்சுக்குத் தகுந்த மாதிரி இதைச் சொல்லிடு. தப்பித் தவறி நடுவிலே உன் சொந்தக் குரலுக்குத் தாவிடாதே. பூராக் காரியமும் கெட்டுடும்.''

தீபக்கிடம் எண்கள் சுழற்றி ரிங் ஆரம்பித்ததும் ரிசீவரைக் கொடுத்தான் ஷியாம்.

''ஹலோ'' என்றது பெண் குரல்.

''வல்லபன் சார் இருக்காராங்க? பேசணும்'' என்றான் பெண் குரலில்.

சில விநாடிகளில்...

''ஹலோ, வல்லபன் பேசறேன்.''

''வணக்கம் சார். நிவிதா பேசறேன். என்ன முடிவு செஞ்சீங்க?''

''நானா? நீதானேம்மா எவ்வளவு தொகை இதுக்குத் தேவைன்னு நாளைக்குச் சொல்றதாச் சொன்னே. நீதானம்மா சொல்லணும்.''

''அந்த மோசடி சம்பந்தப்பட்ட அடிப்படையான ஆதார டாக்குமெண்ட்டை நான் எடுத்துத் தர்றதாலே நீங்க கேஸ்ல நிச்சயம் ஜெயிச்சிடுவீங்கதானே?''

''ஆமாம்.''

''கிட்டத்தட்ட ஏழு லட்சம் உங்களுக்கு மிச்சம். அதுக்காக அதிலே பாதி கொடுங்கன்னு அநியாயமா நான் கேக்கலை. எனக்கு இருபத்தையாயிரம் போதும்.''

''தர்றேன். எங்கே சந்திச்சித் தரட்டும்?''

''இது சம்பந்தமா நாம நேர்ல சந்திக்கறது அவ்வளவு நல்லதா எனக்குப் படலை.''

''யாராச்சும் ஆள் மூலமாக கொடுத்தனுப்பட்டுமா?''

''அதுவும் வேணாம். யாரும் சந்தேகப்படாம, நேர்லயும் சந்திச்சுக்காம தபால் மூலமாவே நம்ம காரியத்தை முடிச்சுக்கலாம் சார். நிவிதாங்கிற என் பேர்ல நீங்க இருபத்தி ஐயாயிரம் ரூபாய்க்கு பாங்க்ல டிமாண்ட் டிராஃப்ட் எடுங்க. சைதாப்பேட்டை பிராஞ்ச்சுக்கு எடுங்க. எந்த பாங்க்ல வேணாலும் எடுங்க. டிராஃப்டை கிராஸ் பண்ணாம வாங்குங்க. டிராஃப்ட் அப்ளிகேஷன்ல ஹரின்னு எழுதுங்க.''

''ஹரியா? யாரு அது? எதுக்கு அப்படி?''

''சொல்றேன். டிராஃப்டை கவர்ல வச்சி ஃப்ரம் ஹரின்னு மட்டும் எழுதி, என் ஆபீஸ் அட்ரஸ் டைப் செஞ்சி ரெஜிஸ்தர் தபால்ல அனுப்புங்க. ஹரி என் சொந்தக்காரர். அடிக்கடி அவர்கிட்டேர்ந்து எனக்குத் தபால் வரும். அவர் எங்கப்பாகிட்டே வாங்கின கடனுக்கு அப்பப்போ பணம் திருப்பி அனுப்பறார் — நான் சொன்ன மாதிரி. நாளைக்கு எப்படியாச்சும் நான் எங்க ஆபீஸ்ல மாட்டினாக்கூட இந்த இருபத்தையாயிரம் என் சொந்தக்காரர் ஹரி அனுப்பினதுன்னு சொல்லித் தப்பிச்சுக்கலாம் பாருங்க...''

''அடேங்கப்பா. உனக்குப் பிரமாதமான மூளைம்மா. சரி, நீ சொன்ன மாதிரியே உன் பேருக்குச் சைதாப்பேட்டை பிராஞ்சுக்குக் கிராஸ் பண்ணாத டிராஃப்ட் எடுத்து ஹரின்னு ஃப்ரம் அட்ரஸ் எழுதி நாளைக்கே ரெஜிஸ்தர் தபால்ல சேர்த்துடறேன். டாக்குமெண்ட்ஸ்...''

''உங்க தபால் கிடைச்ச அதே தினம் நான் அதை ரெஜிஸ்தர் தபால்ல அனுப்பி வைக்கிறேன். என்னைத் தாராளமா நம்பலாம்.''

''நம்புறேன்மா. அதே சமயம் நான் கொஞ்சம் வில்லங்கமான ஆளு. பல பேரை ஏமாத்தி இருக்கேனே ஒழிய... யார்கிட்டேயும் ஏமாந்ததில்லை, புரிஞ்சுதாம்மா?''

''நான் உங்களை ஏமாத்திடுவேனோங்கிற கவலையே உங்களுக்கு வேணாம் சார். பணத்துக்கு ஆசைப்பட்டுத்தான் இந்தக் காரியம் செய்றேன். ஒரு பெரிய நிறுவனத்தோட முதலாளி நீங்க. பண பலமும், படை பலமும் இருக்கும். உங்களை ஏமாத்திட்டுப் பொம்பளை நான் வாழ்ந்துட முடியுமா? உங்க தபால் வந்ததும் நான் போஸ்ட் செய்றேன். வச்சிடவா சார்?''

என்று வைத்து விட்டு, ''எப்படிடா?'' என்று பெண் குரலில் கேட்டு, பிறகு கனைத்துக் கொண்டு, ''ச்சீ! பழகிடுச்சி. எப்படிடா?'' என்றான் தீபக் தன் குரலில்.

''வேலை முக்கால்வாசி பின்னி முடிச்சாச்சு. சியர்ஸ்'' என்று தன் கிளாஸை அவன் கிளாஸுடன் மோதிச் சிரித்தான் ஷியாம்.

(தொடரும்)

**வே**லை கிடைத்து சுசிலா ஆபீஸில் நுழைந்ததும் ஹெட்கிளார்க் நல்வரவு சொல்லி வரவேற்று செக்‌ஷனுடைய மற்ற சிப்பந்திகளை அறிமுகம் செய்வித்தார்.

ஒவ்வொருவருக்கும் ஹலோ சொன்னாள். அப்பாவின் அறிவுரைகள் நினைவுக்கு வந்தன.

'யாரையும் பகைச்சுக்காதே சுசி. ஆண்கள் யாரானாலும் ரொம்பப் பழகாதே. சிரிக்காதே. ஓர் அளவோட நடந்துக்கிட்டாத் தான் மதிப்பு... இதுவே நீ ஆசைப்படறேங்கறதுக்காகத்தான் வேலைக்கு அனுப்பறேன்...'

"இவர் யக்ஞராமன். எஸ்டாபிளிஷ்மெண்ட்ல இருக்கார். ரூல்ஸ் அண்ட் ரெகுலேஷன்ஸைக் கரைச்சுக் குடிச்சவர். ஏ. ஓ. வுக்கே சந்தேகம் வந்தால் இவரைத்தான் கேட்பார்..."

"ஹலோ..."

"என்னம்மா ஹலோ... உன்னை விட எத்தனை வருஷம் பெரியவன். வணக்கம் சார்னு சொல்லு..." என்றார் கிண்டலாக.

"வணக்கம் சார்..."

"சும்மா விளையாட்டுக்கு மிரட்டினேன். பயந்துடாதே... நான் என்ன அவ்வளவு வயசானவனா? சும்மா ஃப்ரெண்ட்லியா ஹலோன்னே இனிமேல் சொல்லு..." என்றார் மறுபடியும் சிரித்துக் கொண்டு.

'சரியான அறுப்புக் கேஸ்...' என்று நினைத்துக் கொண்டாள்.

கடைசியாக ஃப்ராங்க்ளின் அறிமுகமானான், டெஸ்பாட்ச் செக்‌ஷனில்.

ஒரு நிமிஷம் முகம் நிமிர்ந்து ஹலோ சொன்னவளின் கண்களில் பயம் குடி புகுந்தது. இவனா...?

கல்லூரி நாட்களில் காலேஜ் பஸ்ஸின் பின்னாலேயே மோட்டார் சைக்கிளில் ரவுண்ட் அடித்துக் கலாட்டா செய்தவன். மாதா கோயில் திருவிழாக்களில் போகிற வருகிற பெண்களை நாலைந்து பேரோடு சேர்ந்து கிண்டல் செய்தவன்.

'ப்ளஸ் டூ படிக்கிற ஒரு பெண்ணைக் காரில் கடத்திச் சென்று கட்டாயக் கல்யாணம் முடித்துத்தினசரிகளில்சூடானசெய்தியாய்ப் பிரபலமான அதே ஃப்ராங்க்ளினா...?'

சுசிலாவுக்குத் தலைசுற்றியது...

"என்னங்க, நானும் ஸ்டாஃப்தான். எனக்கும் ஹலோ சொல்லலாம்..." என்றான் பளீரென்ற சிரிப்போடு.

"ஹலோ..." வாயசைந்தது. தலை லேசாக அசைந்தது.

"சரி... புதுசா ஜாய்ன் பண்ணியிருக்கீங்க. பார்ட்டி கிடையாதா? என்ன ஹெட்கிளார்க் சார், நம்ம வழக்கப்படி தந்துட வேண்டியதுதானே...!" — இது ஃப்ராங்க்ளின்.

ஆழம் பார்க்கிறானா, விளையாட்டுக்குச் சொல்கிறானா...?

சுசிலாவுக்குப் பர்சில் இருந்த நாலு ரூபாய் பத்து காசுகள் நினைவிற்கு வந்தது.

எட்டுப் பேருக்கு எஸ். கே. சி. மட்டும் என்றாலும் கூடப் பதினாறு ரூபாயாவது வேண்டியிருக்குமே...?

ஹெட்கிளார்க் ஒரு நிமிஷம் பரிதாபமாகப் பார்த்தார்.

"பணம் வேணும்னா இன்னிக்கு நான் தர்றேன். நாளைக்குத் திருப்பித் தந்துடலாம்..."

ஒரு பிரச்னை தீர்ந்தது.

**வி**ளையாட்டு மாதிரி சுசிலா வேலைக்குச் சேர்ந்து ஆறு மாதங்கள் ஆகிவிட்டன.

நா. நாகராஜன்

செக்‌ஷனில் எல்லோரையும் கிண்டல் செய்கிற அளவுக்குப் பழகியாகி விட்டது.

ஃப்ராங்க்ளினிடம்கல்லூரிநாட்களில்அவன் பின் தொடர்ந்ததைச் சொன்ன போது; 'அதெல்லாம் ஒரு ஜாலிக்குச் செய்தது...' என்றான்.

இப்போது யோசித்துப் பார்க்கிற பொழுது, அவன் வயதிற்கும் அவன் பழகிய கூட்டத்திற்கும் அது சரிதான் என்றே தோன்றியது.

"கல்யாணம் எப்போ சுசி...?"

"செய்துக்கணும்..."

"சரி, அதுதான் எப்போ? எம்ப்ளாய்டாவும் ஆயாச்சு.... உள்ளூரிலேயே மாப்பிள்ளை பார்த்துட வேண்டியதுதானே...?"

"ம்..."

"ஆனால் உங்க ஆட்கள் ஜாதகம் அது இதுன்னு சொல்லி முப்பது வயசு ஆகிற வரைக்கும் இழுத்தடிச்சுடுவாங்க இல்லையா...?" என்றான் சிரித்தபடி.

"ஆமாம்..."

"என் ஃப்ரெண்ட் ஒருத்தன் இருக்கான். உங்க சாதிதான். பண்ணிக்கிறீங்களா?"

"இது நினைச்ச உடனே நடக்கிற காரியம் இல்லே ஃப்ராங்க்ளின். ஜாதகம் பொருந்தணும், டேர்ம்ஸ் ஒத்துக்கணும். அவருக்கு என்னைப் பிடிக்கணும்..."

"அடேயப்பா... சரி. வேளாங்கண்ணி போறேன். உங்களுக்குச் சீக்கிரம் கல்யாணம் ஆகணும்னு நான் பிரார்த்திக்கிறேன் சுசி..." என்றான்.

சட்டென்று மனத்திற்குள் ஒரு கதவு திறந்து கொண்டது. மனத்திற்குள் பூவால் வருடியது மாதிரி ஓர் ஆறுதல்.

'இப்படியும் கள்ளமில்லாமல் ஓர் ஆண் மகனா...? இவன் என் உடன்பிறப்பு மாதிரி பிரார்த்திக்கிறேன் என்கிறானே...!'

மனம் சந்தோஷம் தாங்காமல் துடித்தது.

''என்ன பேச்சையே காணோம்! நான் ஏதேனும் தப்பாகச் சொல்லிட்டேனு கசி? சாரி...''

''இல்லே ஃப்ராங்ளின், நீங்க எனக்காக எடுத்துக்கிற அக்கறையைப் பார்த்ததும் அசந்துட்டேன். தேங்க்யூ... தேங்க்யூ வெரிமச் ஃபார் த லவ் அண்ட் அஃபெக்ஷன்...'' என்றாள் கசி.

**வே**ளாங்கண்ணி டூர் முடிந்து அவன் திரும்பிய சமயம் கசியை ஒரு பேங்க் ஆபீஸர் வந்து பெண் பார்த்துவிட்டுப் போயிருந்தார்.

''என்ன கசி, பையனை உனக்குப் பிடிச்சிருக்கா...?''

''இப்படிக் கேட்ட முதல் ஆள் நீங்கதான் ஃப்ராங்க்ளின். எல்லோரும் அவனுக்கு என்னைப் பிடிச்சிருக்கான்னுதான் கேட்டாங்க. அவன் தீர்மானம்தான் என் வாழ்க்கையை நிச்சயிக்குது. பரஸ்பர அண்டர்ஸ்டாண்டிங் இடையாது...''

''அட... ஒரு கேள்வி கேட்டா ஒரு லெக்சரே கொடுக்கிறியே... சும்மா சொல்லக் கூடாது கசிலா... நீ பெரிய ஆளாயிட்டே...''

அவன் சொன்னதை ஒப்புக் கொள்கிற மாதிரி சிரித்தாள் கசி.

''இன்னுமா அவங்க ரிசல்ட் எழுதலே...?''

''ரிசல்ட் சொல்லலேன்னு நெகடிவ் ரிப்ளைதான் ஃப்ராங்க்ளின். ஒரு முடிவை நம்ப கம்பெல் பண்ணி அவங்ககிட்டே இருந்து வரவழைக்கவோ அல்லது தெரிஞ்சிக்க முயற்சி பண்ணவோ கூடாது...''

''நிஜம்மாவே நீ பெரிய ஆளுதான் கசி. எவ்வளவு ஆழமாச் சிந்தனை பண்றே...?''

''அட போதும்... என்னை ரொம்பப் புகழ்றீங்க ஃப்ராங்க்ளின்.

''உண்மையிலேயே எனக்கு இப்படி ஒரு ஃப்ரெண்ட் இடைச்சதுக்கு நான் சந்தோஷப்படணும். ஒரு நாள் என் வீட்டுக்கு வா கசி. என் மிஸஸுக்கு உன்னை இன்ட்ரட்யூஸ் பண்ணி விடறேன். வீட்டில் பாதி நேரம் உன்னைப் பத்தித்தான் பேசிக்கிட்டிருப்பேன்...!''

''உதைக்க மாட்டாங்களா...?''

''ஏன்?'' என்றான் அப்பாவியாக.

''சொந்தப் பெண்டாட்டிகிட்டேயே இன்னொரு பொண்ணைப் பத்திப் பேசறீங்களே. அதுவும் புகழ்ந்து...''

''இதுல என்ன இருக்கு? நாம பேசறதை அப்படியே சொல்றேன். அவ்வளவுதான்...''

''கேட்கிறவங்க அதை அப்படியே எடுத்துக்கணும் இல்லியா...?''

''என் மிஸஸ் அப்படியில்லே... நல்ல பொண்ணு...''

''கொடுத்து வைச்சவ...''

''எப்படிச் சொல்றே...?''

''நாலு வருஷக் கல்யாண வாழ்க்கைக்குப் பிறகும் மனைவியை மனசார நேசிக்கறீங்க. விட்டுக் கொடுக்காமல் பாராட்டறீங்க... காதல் திருமணம்னு நான் என்னவோன்னு நினைச்சுக்கிட்டிருந்தேன்...'' என்றாள்.

**ஃப்**ராங்க்ளின் ஒரு மாத லீவு கோரிய போதுதான் அவன் பிரச்னையின் ஆழம் தெரிந்தது.

''வயிற்று வலின்னு சாதாரணமாச் சொல்லிக்கிட்டிருந்தா கசி. டாக்டர்கிட்டே போய்க் காண்பித்து முதல்ல எக்ஸ்ரே எடுத்த போது, எதுவும் டயக்னைஸ் பண்ண முடியலே. பிறகு வலி ரொம்பத் தொல்லைப்படுத்தவே, பெரிய டாக்டரைப் போய்ப் பார்த்த போது, வயிற்றில் பெரிய கட்டி வளர்ந்திருக்குன்னு சொல்லிட்டாரு.... உடனே மேஜர் ஆபரேஷன் செய்யணுமாம்...''

பேசி முடித்ததும் வயிற்றில் பயப்பந்து உருண்டது.

''அவங்க வீட்டுக்குத் தெரியுமா இது...?''

''தெரியும். அநேகமா அவங்க உறுதியை விட்டுட்டு வந்து உதவுவாங்கன்னு நம்பறேன். கசி, எனக்காகப் பிரார்த்தனை பண்ணும்மா.''

''கண்டிப்பா...'' என்றாள்.

''உன் கல்யாணம் என்னாச்சு?''

''கோமா ஸ்டேஜ்லேயே இருக்கு. ஒரு முடிவும் தெரியலே...

''இந்த நேரத்திலேயும் ஜோக்கா கசி...?''



''யார், 'நான் சொல்ற பேச்சைக் கேட்டிருங்களோ,' அவங்களுக்குத்தான் 'காட்பாரிஸ்' சாக்லேட்டுன்னு, அம்மா சொன்னாங்கடா...''

''உன் தம்பி, வாங்கிக்கிட்டானாக்கும்?''

''இல்லே, 'அப்பா' வாங்கிக்கிட்டார்!''

— ஆர். வசந்தகுமார்.

**வாசகர் பங்கு:**

# தளபதி திடமதி






இந்த இதழ் தவிர இன்னும் நாலே நாலு இதழ்களுக்குத்தான் இந்த அறிவிப்பும், கூப்பனும் இடம்பெறப் போகின்றன. அதற்குமுன் அதிக பட்ச பரிசுத் தொகையை நீங்கள் தட்டிக் கொண்டு போக வேண்டாமா? மாறிவரும் அரசியல் சூழ் நிலைகள், சமுதாயப் பிரச்னைகளுக்கு ஏற்பத் தளபதி திடமதி என்ன 'விட்' அடிப்பார் என்பதைக் கீழே கூப்பனில் எழுதி அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு ரூ. 25/–. அடுத்து வரும் வாரங்களில் ஒருவரே எழுதிய சில துணுக்குகள் பிரசுரமானால் ஒவ்வொரு முறையும் பரிசு இரட்டிப்பாகும். அதிகபட்சப் பரிசு ரூ. 400/–. உறை மீது "தளபதி திடமதி" என்று குறிப்பிடவும்.

**கூப்பன்:**

**கல்கி இதழ் 27.3.88 — முடிவு தேதி: 5.4.88.**

**தளபதி திடமதி:** "..............................

..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

.........................................."

**என் பெயர்:** ..............................

**விலாசம்:** ..............................

..............................

"சிரிக்கக் கத்துக்கிட்டாத்தான் இனிமேல் வாழ முடியும். எல்லாத்தையும் சீரியஸா திங்க் பண்ணினேன்னா நிம்மதியே போயிடும். நட்பு ஒரு ஆறுதல். சிரிப்பு ஒரு வரப்பிர சாதம்... பார்ப்போம் ஃப்ராங்க்ளின். நல்ல படியா ஆபரேஷன் நடக்கட்டும்..."

பிறகு ஃப்ராங்க்ளினை இரண்டு வாரங்கள் சந்திக்கவில்லை.

முதல் இரண்டு நாட்கள் அவனின் இல்லாமை மிகவும் சங்கடப்படுத்தியது.

அரை மணி நேரத்திற்கு ஐந்து நிமிஷம் ஏதாவது ஜோக் அடித்து, கிண்டல் பேசி, வாய்விட்டுச் சிரித்து... எதுவும் இல்லாமல் இப்போது போரடிக்கிறது.

திடீரென்று ஒருநாள் துர்கா பவனில் யதேச்சையாகச் சந்தித்தான்.

கையில் பிளாஸ்குடன் காப்பி வாங்க வந்திருந்தான். கூட அவன் நண்பன்.

"சுசி, அட நீயா...? இப்போதுதான் இவன் கிட்டே உன்னைப் பத்திப் பேசிக்கிட்டிருந் தேன். எப்படி இருக்கே...?"

"ஃபைன் ஃப்ராங்க்ளின். ஆபரேஷன் சக்ஸஸா முடிஞ்சுதா? உங்க உறவினர்கள் யாராவது வந்தாங்களா...?"

"எங்க அப்பா வந்திருக்காரு. அவங்க அம்மா வரப் போறதா எழுதியிருக்காங்க. ஆபரேஷன் சக்ஸஸ். ஜீஸஸ் காப்பாத்திட் டாரு! என்னோட பிரார்த்தனைக்குப் பலன் கிடைச்சிட்டது..."

பிளாஸ்க்கை மொபெட்டில் வைத்தான். அவளைத் தன் நண்பன் சுந்தரராஜனுக்கு அறிமுகப்படுத்தி வைத்தான்.

"இது மிஸ்டர் சுந்தரராஜன்..."

"ஹலோ... ஃப்ராங்க்ளின் உங்களைப் பத்தி ரொம்பச் சொல்லியிருக்கார். சந்திச்சதுல ரொம்ப சந்தோஷம்..."

போகலாமா... இல்லே நீங்க ரெண்டு பேரும் பேசிட்டு வர்றீங்களா...?" என்றான் ஃப்ராங்க்ளின் சிரித்துக் கொண்டே.

சுசியின் முகம் சிவந்தது.

"ரொம்ப வார்றே நீ..." என்றான் சுந்தர ராஜன் அவளைத் தோளில் தட்டிக் கொண்டே!

"பார்க்கலாம். ஒரு தடவை வீட்டுக்கு வாங்க ராஜன்..." என்றாள்.

"அட, அதுக்குள்ள உரிமையோட பேரைச் சுருக்கியாச்சா! ஒரு வருஷப் பழக்கத்துல நான்தான் உன்னை எங்க வீட்டுக்குக் கூப் பிட்டிருக்கேன். நீ என்னைக் கூப்பிட்ட தில்லே. சுந்தரராஜனை மட்டும் உடனே வீட் டுக்குக் கூப்பிடறியே, இது நியாயமா...?"

"ஐயோ... உங்க அறுப்பு ஆபீஸோடு போதுமே! அங்கேதான் கேட்டு ஆகணும். விரும்பி வீட்டுக்கு அழைச்சு வேறே... கழுத்தைக் காயப்படுத்திக்கணுமா...?" சுசீலா பொய்யாகக் குற்றம் சாட்டினாள்.

"சரி லீவு முடிஞ்சு வந்து பார்த்துக்க றேன்" என்றான், போலிக் கோபத்துடன்.

அவர்கள் போன பிறகு சுசி கொஞ்ச நேரம் அங்கேயே நின்று கொண்டிருந்தாள், சந்தோஷமாக...

# பொன்னியின் செல்வன்



# முதல் அத்தியாயம்

# கோடிக்கரையில்

கடலில் அடித்த சுழிக் காற்று சோழ நாட்டுக் கடற்கரையோரத்தில் புகுந்து தன் துரிதப் பிரயாணத்தைச் செய்து கொண்டு போயிற்று. "கல்லுளி மங்கன் போன வழி காடு மலையெல்லாம் தவிடு பொடி" என்பது போல அந்தச் சுழிக் காற்றுப் போன வழியெங்கும் பற்பல பயங்கர நாசவேலைகளைக் காணும்படி இருந்தது. கோடிக்கரையிலிருந்து காவேரிப்பூம் பட்டினம் வரையில் சோழ நாட்டுக் கடற்கரையோரங்களில் வாயு பகவானின் லீலை செய்த வேலைகளை நன்கு பார்க்கும் படியிருந்தது. எத்தனையோ மரங்கள் வேரோடு பெயர்ந்தும் கிளைகள் முறிந்தும் கிடந்தன. வீடுகளின் கூரைகளைச் சுழிக்காற்று அப்படியே தூக்கி எடுத்துக் கொண்டு போய்த் தூர தூரங்களில் தூள் தூளாக்கி எறிந்து விட்டிருந்தது. குடிசைகள் குட்டிச் சுவர்களாகியிருந்தன. கோடிக்கரைப் பகுதியில் எங்கே பார்த்தாலும் வெள்ளக்காடாயிருந்தது. கடல் பொங்கி வந்து பூமிக்குள் புகுந்து விட்டதோ என்று தோன்றியது. ஆனால் பூமிக்கும் கடலுக்கும் மத்தியில் இருந்த வெண் மணல் பிரதேசம் அந்தக் கொள்கையைப் பொய்ப்படுத்தியது. அந்த வெண் மணல் பிரதேசத்தில் ஆங்காங்கு புதைசேறு இருந்த இடங்களில் மட்டும் இப்போது அதிகமாகத் தண்ணீர் தேங்கியிருந்தது. அப்படிப்பட்ட இடங்களில் இப்போது மனிதனோ மிருகமோ இறங்கி விட்டால், உயிரோடு சமாதி தான்! யானைகளைக் கூட அப் புதைசேற்றுக் குழிகள் இப்போது விழுங்கி ஏப்பம் விட்டு விடும்!

சுழிக்காற்று அடித்த இரண்டு நாளைக்குப் பிறகு கோடிக்கரைக்குப் பெரிய பழுவேட்டரையரும் அவருடைய பரிவாரங்களும் வந்து சேர்ந்தார்கள். பல்லக்கும் பின் தொடர்ந்து வந்தது. ஆனால் இம் முறை அந்தப் பல்லக்கில் அமர்ந்து இளைய ராணி நந்தினி தேவியே பிரயாணம் செய்தாள். மதுராந்தகத் தேவரை அந்தரங்கமாக அழைத்துப் போக வேண்டிய அவசியம் இப்போது இல்லை. மேலும் சில சமயம் இளைய ராணியையும் உடன் அழைத்துப் போனால்தானே மறுபடி அவசியம் நேரும்போது மதுராந்தகரை அழைத்துப் போக அந்தப் பல்லக்கு வாகனம் உபயோகமாயிருக்கும்? — இவ்வாறு நந்தினி கூறியதைப் பழுவேட்டரையர் உற்சாகமாக ஒப்புக் கொண்டார். காமாந்தகாரத்தில் மூழ்கியிருந்த அக் கிழவருக்குத் தம்முடன் அந்தப் புவன சுந்தரியை அழைத்துப் போவதில் ஆர்வம் இருப்பது இயல்புதானே?

சுழிக்காற்றுக்கு முன்னால் அவர்கள் நாகைப்பட்டினத்துக்கு வந்திருந்தார்கள். அங்கே தனாதிகாரி தமது உத்தியோகக் கடமைகளை முதலில் நிறைவேற்றினார்.

நாகைப்பட்டினம் அப்போது தமிழகத்தின் முக்கிய துறைமுகப் பட்டினங்களில் ஒன்றாயிருந்தது. வெளிநாடுகளிலிருந்து எத்தனை எத்தனையோ பொருள்கள் பெரிய பெரிய மரக்கலங்களில் வந்து அத் துறைமுகத்தில் இறங்கிக் கொண்டிருந்தன. அப்பொருள்களை ஆயிரக்கணக்கான சிறிய படகுகள் ஏற்றிக் கொண்டு வந்து கரையில் சேர்த்தன. கரையிலிருந்து மாற்றுப் பண்டங்களை ஏற்றிக் கொண்டு போய் மரக்கலங்களில் சேர்த்தன. இவற்றுக்கெல்

லாம் சுங்க இறை விதித்து வசூலிக்கும் அதிகாரிகள் பலர் இருந்தனர். அவர்கள் சரிவர வேலை செய்கிறார்களா என்பதை மேற்பார்வை பார்ப்பது சோழ நாட்டுத் தனாதிகாரி பெரிய பழுவேட்டரையரின் உரிமையும் கடமையும் அல்லவா?

அந்த வேலை பூர்த்தியான பிறகு பெரிய பழுவேட்டரையர் நாகைப்பட்டினத்தில் புகழ்பெற்றிருந்த சூடாமணி புத்த விஹாரத்துக்கு விஜயம் செய்தார். பிக்ஷுக்கள் அவரைத் தக்கபடி வரவேற்று உபசரித்தனர். புத்த விஹாரத்துக்குத் தேவை ஏதேனும் உண்டா, பிக்ஷுக்களுக்குக் குறைகள் ஏதேனும் உண்டா என்று தனாதிகாரி விசாரித்தார். ஒன்றும் இல்லையென்று பிக்ஷுக்கள் கூறி, சுந்தர சோழ மன்னருக்குத் தங்கள் நன்றியையும் தெரிவித்தார்கள்.

சில நாளைக்கு முன் இந்த விஹாரத்தைச் சேர்ந்த பிக்ஷுக்கள் இருவர் தஞ்சைக்குச் சக்கரவர்த்தியைப் பார்க்க வந்திருந்தார்கள். புத்த சங்கத்தின் சார்பாகச் சுந்தர சோழர் விரைவில் நோய் நீங்கிக் குணம் அடைய வேண்டும் என்ற வாழ்த்துக்களைத் தெரிவித்தார்கள். அப்போது அவர்கள் இளவரசர் அருள்மொழி வர்மர் இலங்கையில் புத்த தர்மத்துக்குச் செய்து வரும் தொண்டுகளைக் குறித்துத் தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்தார்கள். இடிந்து போன புத்த விஹாரங்களைப் புதுப்பித்துக் கொடுக்கும்படியாக இளவரசர் கட்டளையிட்டு நிறைவேற்றியும் வருவது இலங்கையில் உள்ள புத்த பிக்ஷுக்களின் மகா சங்கத்துக்கு அளவற்ற மகிழ்ச்சியை அளித்து வருவதாகவும் அவர்கள் கூறினார்கள். "சக்கரவர்த்திப் பெருமானே! இன்னும் ஒரு மகிழ்ச்சிகரமான செய்தியும் நாங்கள் கேள்விப்படுகிறோம். இலங்கையின் பழைமையான சிம்மாசனத்தைத் தங்களுடைய இளைய திருக்குமாரருக்கே அளித்து இலங்கை அரசராக முடிசூட்டி விடலாம் என்று பிக்ஷுக்களில் ஒரு பெரும் பகுதியார் கருதுகிறார்களாம்! அவ்விதம் தங்களுக்குள் பேசிக் கொண்டிருக்கிறார்களாம்! இதைக் காட்டிலும் நம் இளவரசரின் பெருமைக்கு வேறு என்ன சான்று வேண்டும்!" என்றார்கள்.



தைக் கேட்டுக் கொண்டிருந்த பெரிய பழுவேட்டரையரின் உள்ளத்தில் ஓர் அபூர்வமான யோசனை உதயமாயிற்று. பிக்ஷுக்கள் சென்ற பிறகு அதைச் சுந்தர சோழச் சக்கரவர்த்தியிடமும் தெரிவித்தார்.

"மூன்று உலகும் ஆளும் இறைவா! தங்கள் அதிகாரம் எட்டுத் திசையிலும் பரவி நிலைபெற்றிருக்கிறது. இந்தப் பரந்த பூமண்டலத்தில் தங்கள் ஆணைக்குக் கீழ்ப்படியாதவர்கள் யாரும் இல்லை. ஆனால் தங்கள் திருப்புதல்வர்கள் இருவரும் மட்டும் இதற்கு விலக்காயிருக்கின்றனர். அவர்களுக்குத் துர்ப்புத்தி புகட்டும் சிலர் சோழ மகாராஜ்யத்தில் பெரிய பதவிகள் வகிக்கிறார்கள். ஆதித்த கரிகாலர் தங்கள் விருப்பத்தின்படி இங்கு வருவதற்கு மறுத்துத் தங்களைக் காஞ்சிக்கு வரும்படி ஓலை அனுப்புகிறார். அவருக்கு இவ்வாறு துர்ப்புத்தி புகட்டுகிறவர் வேறு யாரும் இல்லை; தங்கள் மாமனாரான திருக்கோவலூர் மலையமான்தான். அவ்வாறே ஈழ நாட்டிலிருந்து தங்கள் இளம் புதல்வரைத் தருவிக்கும்படியாகத் தாங்கள் பன்முறை சொல்லி விட்டீர்கள். நானும் ஆள் அனுப்பி அனுப்பி அலுத்து விட்டேன். நமது ஆள்கள் இளவரசரைச் சந்தியாதபடியும் நம் ஓலைகள் இளவரசரைச் சேராதபடியும் அந்தக் கொடும்பாளூர்ப் பெரிய வேளான் செய்து கொண்டு வருகிறான். இல்லாவிடில், தங்கள் அருமைப் புதல்வர் தங்கள் விருப்பந் தெரிந்த பிறகும் இத்தனை காலம் வராமல் தாமதிப்பாரா? இந்நிலைமையில் எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. தாங்கள் கட்டளையிட்டால் அதைத் தெரிவிக்கிறேன்" என்றார் பழுவேட்டரையர்.

சக்கரவர்த்தி சம்மதம் கொடுத்ததின் பேரில் தனாதிகாரி தெரிவித்தார்: "இலங்கைச் சிம்மாதனத்தைக் கவர்ந்து முடிசூட்டிக் கொள்ளச் சதி செய்ததாகக் குற்றம் சாட்டி இளவரச

ரைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படி கட்டளை பிறப்பித்து அனுப்புவோம். அத்தகைய கட்டளையைப் பூதி விக்கிரம கேசரி தடை செய்ய முடியாது. அன்றியும் இளவரசரிடம் நேரில் எப்படியேனும் கட்டளையைச் சேர்ப்பிக்கச் செய்து விட்டால், இளவரசர் கட்டாயம் வந்தே தீருவார்!''

இதைக் கேட்ட சுந்தர சோழர் புன்னகை புரிந்தார். விசித்திரமான யோசனைதான்; ஆயினும் ஏன் கையாண்டு பார்க்கக் கூடாது? பொன்னியின் செல்வனைப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வம் சக்கரவர்த்தியின் மனத்தில் பொங்கிக் கொண்டிருந்தது. தம்முடைய அந்திய காலம் நெருங்கிக் கொண்டிருப்பதாக அவர் உணர்ந்தார். ஆகையால் தம் அந்தரங்க அன்புக்குரிய இளங்கோவிடம் இராஜ்யத்தைப் பற்றித் தம் மனோரதத்தை வெளியிட விரும்பினார். மதுராந்தகனுக்கே தஞ்சாவூர் ராஜ்யத்தை அளிக்க வேண்டும் என்ற தம் விருப்பத்தை அறிந்தால் அருள்மொழி வர்மன் மறுவார்த்தை பேசாமல் அதை ஒப்புக் கொள்வான். பின்னர் அவன் மூலமாக ஆதித்த கரிகாலனுடையமனத்தைமாற்றுவதும்எளிதாயிருக்கும்.

இவ்வாறு சிந்தித்துத் தனாதிகாரியின் யோசனையைச் சக்கரவர்த்தி ஆமோதித்தார். அதன் பேரிலேதான் அருள்மொழி வர்மரைச் சிறைப்படுத்தி வரும்படி கட்டளை அனுப்பப்பட்டது. இளவரசருக்கு எவ்விதத் தீங்கும் ஏற்படக் கூடாது என்ற கண்டிப்பான கட்டளையும் மரக்கலத் தலைவனுக்குப் பிறப்பிக்கப்பட்டது.

மேற்கூறிய கட்டளையுடன் இரு மரக்கலங்கள் ஈழ நாட்டுக்குச் சென்ற பிறகு, பெரிய பழுவேட்டரையர் சிறிது மனக்கவலை கொண்டார். இளவரசருக்கு ஏதேனும் நேர்ந்துவிட்டால் தமக்குப் பெரும் பழி ஏற்படும் என்பதை உணர்ந்தார். ஆகையால் தாமே நாகைப் பட்டினம் துறைமுகத்துக்கு நேரே சென்றிருந்து இளவரசரைத் தக்கபடி வரவேற்றுத் தமது சொந்தப் பொறுப்பில் அவரைத் தஞ்சாவூருக்கு அழைத்துக் கொண்டு வர விரும்பினார்.

இந்த யோசனைக்கு இன்னும் சில உபகரணங்களும் இருந்தன. இளவரசர் தஞ்சைக்கு வந்து சக்கரவர்த்தியைப் பார்ப்பதற்கு முன்னால் செம்பியன் மாதேவியோ குந்தவையோ அவரைப் பார்க்கும்படி விடக்கூடாது. அந்தப் பெண்கள் இருவரும் இளவரசர் மீது மிக்க செல்வாக்கு உள்ளவர்கள்; பழுவேட்டரையரை வெறுப்பவர்கள். ஆகையால் இளவரசரிடம் ஏதாவது சொல்லி அவர் மனத்தைக் கெடுத்து விடுவார்கள். தக்க சமயம் வருவதற்குள், அதாவது சுந்தர சோழர் மரணம் அடைவதற்குள், ஏடாகூடமாக ஏதேனும் நடந்து காரியங்கள் கெட்டுப் போகலாம்.

அன்றியும், பொக்கிஷ நிலவறையின் சுரங்க வழிக் காவலன் பின்னாலிருந்து தாக்கிக் குத்தப்பட்டதிலிருந்து தனாதிகாரியின் மனத்தில் ஏதேதோ விபரீதச் சந்தேகங்கள் உதித்திருந்தன. பொக்கிஷ சாலையில் யாராவது ஒளிந்திருக்கக் கூடுமா? அப்படியானால், அதுயாராயிருக்கும்? தஞ்சைக் கோட்டைக் காவலர்களிடம் அகப்படாமல் தப்பிச் சென்ற வாணர்குல வீரனாயிருக்குமா? அங்ஙனமானால் அவன் இன்னும் பல இரகசியங்களை அறிந்திருக்கக் கூடும் அல்லவா?

சின்னப் பழுவேட்டரையர் கூறுகிறபடி நந்தினியைப் பார்க்க அடிக்கடி வரும் மந்திரவாதிக்கு இதில் ஏதேனும் சம்பந்தம் இருக்குமா? அதையும் தெரிந்து கொள்ளத்தான் வேண்டும்!

இளைய பிராட்டி குந்தவை தேவிதான் வந்தியத்தேவனை ஓலையுடன் இளவரசர் அருள்மொழிவர்மரிடம் அனுப்பியிருக்கிறாள் என்னும் செய்தியும் தனாதிகாரியின் மனத்தைக் கலங்கச் செய்திருந்தது. வந்தியத்தேவன் மூலம் என்ன செய்தி அனுப்பியிருப்பாள்? தாமும் சம்புவரையர் முதலியவர்களும் சோழ சிம்மாதனத்தைப் பற்றி முடிவு செய்துள்ள யோசனையைப் பற்றி அந்தப் பெண் பாம்புக்குச் செய்தி

## தன் ஆலோசனையை டாக்டரே பின்பற்றுகிறார்!

ஒரு டாக்டரின் பணி ஒருபோதும் சுலபமானதல்ல. அடிக்கடி அவசர கேஸ்களை கவனிப்பது, நீண்ட நேரம் வேலை செய்வது, இரவு பகல் பாராமல் நோயாளிகளின் வீடுகளுக்குச் செல்வது...களைப்பு மிக்க பணி.

அதனால்தான் நான் ஹார்லிக்ஸை நம்பியிருக்கிறேன். ஹார்லிக்ஸில் நிரம்பியுள்ள புரதம், வைட்டமின்கள் தாதுப் பொருட்கள், மாவுச் சத்து—ஆகிய முக்கிய இயற்கை ஊட்டச்சத்துக்கள் அதைச் சிறந்த ஆரோக்கிய பானமாக ஆக்குகின்றன.

எனவேதான், ஒரு நாளில் இரு தடவை ஹார்லிக்ஸ் பருகுமாறு எப்போதும் சிபாரிசு செய்கிறேன். நாள் முழுதும் வேலை செய்த களைப்பைப் போக்கிடும் சுவையான தெம்பூட்டும் பானம் அது. எனக்கு நன்றாகத் தெரியும்! ஏனெனில் நானும் அதைப் பருகுகிறேனே!

உலகெங்கும் உள்ள டாக்டர்கள் ஹார்லிக்ஸ் ஒரு தெம்பூட்டும் ஆரோக்கிய பானம் என்று நம்புகிறார்கள். அதில் சக்தியும், தெம்பும் நல்ல ஆரோக்கியமும் கொடுக்கும் புரதம், வைட்டமின்கள் தாதுப் பொருட்கள், மாவுச்சத்து, ஆகிய முக்கிய இயற்கை ஊட்டச் சத்துக்கள் நிறைய உள்ளன.

டாக்டர்கள் ஹார்லிக்ஸை சிபாரிசு செய்வதில் வியப்பில்லை. இது குடும்பம் முழுவதற்குமே ஊட்டச்சத்து அளிக்கும் மூலாதாரமான பானம் என்று நிரூபிக்கப்பட்டது.



டாக்டர்களால் நம்பப்படுவது —உலகம் முழுவதும்.







**சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்**

HTA 6615 TAM







ஆயிரம் மலர்களின் மயக்கும் மென்மை.
மனதைக் கவரும் மணங்கள். Top 3. Fantasy. Gulistan.
தரமான ஊதுவத்திகள். அளிப்பவர்கள் பத்மினி.

# காரணம்?



திருமதி சேஷாத்ரி ஒவ்வொரு நாளும் இரவில் காஸ் ரெகுலேட்டரையும், பர்னர்களையும் நன்ருக மூடுவதற்கு தவறுவதே இல்லை. ஆனுல், அவர் சிலிண்டருடன் இணைக்கப் பட்டுள்ள ரப்பர் ட்யூபை கவனித்ததேயில்லை. அது மிகவும் பழையதாகி மோசமான நிலையில் இருந்தது. அதில் ஏற்பட்டிருந்த சிறுசிறு வெடிப்புகள் ஒவ்வொரு தினமும் பெரிதாகிக் கொண்டே இருந்திருக்கின்றன. ஒரு நாள், குடும்பத்தினா அனைவரும் வெளியே போயிருந்த போது, காஸ் கசியத் தொடங்கியிருக்கிறது.

திருமதி சேஷாத்ரி அன்று வெகு நேரமாகி வீடு திரும்பினுர். அப்போது மிகவும் களைப்பாய் இருந்ததால், அவர் காஸ் வாடை அடிப்பதை உணரவே இல்லை. சமையலறைக்குள் நுழைந்த அவர் லைட் சுவிட்சைப் போட்டார். சுவிட்சைப் போடும்போது ஒரு சிறிய தீப்பொறி ஏற்பட்டது... அவ்வளவுதான்...திருமதி சேஷாத்ரி சிறிது காயங்களுடன், பெரிய விபத்துக்கு உள்ளாகாமல் தப்பிப் பிழைத்தார். ஆனுல் நீங்களும் அவரைப் போன்று அதிர்ஷ்டசாலியாக இருப்பீர்கள் என்பது என்ன நிச்சயம்...

# பராமரிப்பு

**இதுபோன்ற சூழ்நிலை உங்கள் குடும்பத்தினர்களுக்கு நிகழாதிருக்க உறுதிசெய்து கொள்ளலாம்.**



ரப்பர் ட்யூப் பழுதின்றி இருக்கிறதா என்று முறையாக கவனிக்கவும்.

**இண்டேனின் இரண்டு நிமிட LPG (எல்பிஜி)** பாதுகாப்பு முறையைப் பின்பற்றுங்கள்:

**அதிகாலையில் சமையலறைக்குள் போன முதல்** நிமிடம், காஸ் வாடை அடிக்கிறதா என்று பாருங்கள். அப்படி காஸ் வாடை இருந்தால், கீழே, கொடுக்கப்பட்டுள்ள முன்னெச்சரிக்கைகளைப் பின்பற்றவும். காஸ் வாடை இல்லையெனில் நீங்கள் ரெகுலேட்டரை திருப்பலாம். அவ்வாறு திறக்கும்போது ரப்பர் ட்யூபில் எவ்வித வெடிப்பும் இல்லாது இருக்கிறதா என்று கவனிக்கவும். பர்னரை திறக்கும் முன் தீக்குச்சியைப் பற்றவைத்துப் பார்க்கவும்.

**இரவில் கடைசியாக சமையலறை லைட்டை அணைத்துவிட்டு வரும் முன்,** ரெகுலேட்டாரை மூடவும். பிறகு பர்னர்கள் முழுமையாக மூடி இருக்கின்றனவா என்று உறுதி செய்து கொள்ளவும்.

**காஸ் வாடை வந்தால் உடனடியாக செய்ய வேண்டியவை.**

- ரெகுலேட்டர் மற்றும் பர்னர்களை மூடவும்.
- எல்லா திறந்த சுடர்களையும் அணைத்து விடவும்—ஊதுவத்தியைக் கூட.
- காஸ் வெளியேறும் வகையில் ஜன்னல்களையும் கதவுகளையும் திறந்துவிடவும்.
- லைட்/ஃபான் போன்றவற்றை போடவோ அணைக்கவோ கூடாது. அதனுல் ஏற்படும் ஒரு சிறிய தீப்பொறிகூட பெரிய வெடி விபத்தை உண்டாக்கலாம்.
- தொடர்ந்து காஸ் வாடை இருக்குமானுல், இண்டேன் விநியோகஸ்தரை உடனடியாக அழைக்கவும்.

**தினந்தோறும் பாதுகாப்பிற்காக இரு நிமிடங்களை ஒதுக்குங்கள்.**





எட்டியிருக்குமோ? அதைப் பற்றி ஏதே னும் அவள் எழுதி அனுப்பியிருப் பாளோ?

எப்படியிருந்த போதிலும் இளவர சர் சோழ நாட்டின் கரையில் இறங் கியதும் தாம் அவரை முதலில் சந்திப் பதுதான் நல்லது. வந்தியத்தேவனை யும் இளவரசருடன் சிறைப்படுத்திக் கொண்டு வரக் கட்டளையிட்டிருப்ப தால் அவனையும் முதலில் தாம் பார்த் தாக வேண்டும். அவனுக்கு என் னென்ன தெரியும், எவ்வளவு தூரம் தெரியும் என்பதையும் கண்டுபிடித் தாக வேண்டும்.



ப்படியெல்லாம் யோசித்துப் பெரிய பழுவேட்டரையர் நாகப்பட்டினத்துக்குப் போய்க் காத்திருக்கத் தீர்மானித்தார். அவருக்கு இருந்த காரணங் களைக் காட்டிலும் அதிகமாகவே நந்தினி தேவிக்கும் இருந்தன. வந்தி யத்தேவனை மறுபடி பார்க்கவும் குந்தவை அவனிடம் என்ன ஓலை கொடுத்து அனுப்பினாள் என்பதை அறிந்து கொள்ளவும் நந்தினி மிக்க ஆவலாயிருந்தாள். மந்திரவாதி ரவிதாஸன் போன காரியம் எவ்வளவு தூரம் வெற்றியடைந்தது என்று அறியவும் ஆர்வம் கொண்டி ருந்தாள். ஆகையால் நாகப்பட்டினத் துக்குத் தானும் வருவதாகக் கூறினாள். கரும்பு தின்னக் கூலி வேண்டுமா? கிழவர் உடனே அதற்கு இசைந்தார். கடலில் கரையோரமாக உல்லாசப் படகில் ஏறி நந்தினியுடன் ஆனந்தப் பிரயாணம் செய்வது பற்றி அவர் மனோராஜ்யம் செய்யலானார். அவர் உள்ளத்தையும் உடலையும் எரித்துக் கொண்டிருந்த தாபம் அதன் மூலம் தீர்வதற்கு வழி ஏற்படலாம் என்றும் ஆசை கொண்டார்.

பழுவேட்டரையரும் நந்தினியும் நாகைப்பட்டினத்திலிருந்த போது தான் சுழற் காற்று அடித்தது. காற்றின் உக்கிர லீலைகளை நந்தினி வெகுவாக அனுபவித்தாள். கடற்கரையோரத் தில் தென்னை மர உயரத்துக்கு அலை கள் எழும்பி விழுவதைப் பார்த்துக் களித்தாள். ஆனால் கடலில் உல்லாசப் படகில் ஆனந்த யாத்திரை செய்ய லாம் என்னும் பழுவேட்டரையரின் மனோ ராஜ்யம் நிறைவேறவில்லை.

சுழிக் காற்று அல்லோலகல்லோ லப்படுத்தி விட்டுப் போன பிறகு கடலிலே கப்பல்களுக்கும் படகுகளுக் கும் சேதம் உண்டா என்பதைப் பற்றிப் பழுவேட்டரையர் விசாரித்து அறிந்தார். கரையோரத்தில் அலை வரும் சுழிக்காற்று வரப் போவதை அறிந்து ஜாக்கிரதையாயிருந்தபடி யால் அதிக சேதம் ஏற்படவில்லை யென்று தெரிந்தது. ஆனால் நடுக்கட லில், ஈழத்துக்கும் கோடிக் கரைக்கும் நடுவில், இரு கப்பல்கள் தத்தளித்த தாகவும், அவற்றில் ஒன்று தீப்பற்றி எரிந்து முழுகியதாகவும் கட்டு மரங்களில் மீன்பிடிக்கச் சென்றிருந்த வலையர்கள் சிலர் கூறினார்கள். இது பழுவேட்டரையருக்குமிக்ககவலையை உண்டாக்கிற்று. அந்த இரண்டு மரக் கலங்களும் இளவரசரைச் சிறைப் பிடித்து வந்த கப்பல்களாயிருக்க லாம் அல்லவா? அப்படியானால், இள வரசரின் கதி யாதாகியிருக்குமோ? அவருக்கு ஏதேனும் நேர்ந்திருந்தால் தமக்குப் பெரும் பழி ஏற்படுமே? சோழ நாட்டு மக்களின் எல்லையற்ற அன்பைக் கவர்ந்தவராயிற்றே அருள் மொழி வர்மர்? மக்களுக்கு அவரைப் பற்றி என்ன சொல்லுவது? சக்கர வர்த்திக்குத் தான் என்ன சமா தானத்தைச் சொல்வது? — நிச்சய மான செய்தி தெரிந்து கொள்ள வேண்டும் என்னும் பேராவல் அவ ருக்கு உண்டாயிற்று. கோடிக் கரைக் குப்போனால்ஒருவேளைவிவரம்தெரிய லாம். மூழ்கிய கப்பலை நன்றாய்ப் பார்த் தவர்கள் அங்கே இருக்கக் கூடும். மூழ்கிய கப்பலிலிருந்து தப்பியவர்கள் யாரேனும் கரை சேர்ந்திருக்கவும் கூடும். ஆம், உடனே கோடிக்கரைக் குப் போக வேண்டியதுதான்!

இந்த எண்ணத்தை நந்தினியிடம் வெளியிட்டதும் அவள் ஆர்வத்துடன் அதை ஒப்புக் கொண்டாள். "கோடிக் கரையை நான் இதுவரையில் பார்த்த தில்லை. அந்தப் பிரதேசம் மிக அழகா யிருக்கும் என்று கேள்விப்பட்டிருக் கிறேன். இச்சந்தர்ப்பத்தில் அதையும்



பார்த்து விடலாம்'' என்றாள் நந்தினி.

நாகைப்பட்டினத்திலிருந்து கோடிக் கரைக்கு இரு வழிகள் உண்டு. கடற்கரையோரமாகச் சென்ற நீண்ட கால்வாய் வழியாகப் படகில் ஏறிப் போகலாம். அல்லது சாலை வழியாகவும் போகலாம். பழுவேட்டரையரின் பரிவாரங்கள் அதிகமாயிருந்தபடியால் சாலை வழியாகவே போனார்கள். மேலும் நந்தினி கால்வாய் வழியை விரும்பவும் இல்லை. கால்வாயில் படகில் போனால் பழுவேட்டரையர் தம் காதல் புராணத்தைத் தொடங்கி விடுவார் என்று நந்தினி அஞ்சியது ஒரு காரணம். அது மட்டும் அன்று. சாலை வழியாகச் சென்றால் கடற்கரையோரத்தில் வந்து ஒதுங்கும் கட்டுமரக்காரர்களையும் படகோட்டிகளையும் விசாரித்துக் கொண்டு போகலாம் அல்லவா?

வழியில் அப்படி விசாரித்ததில் புதிய செய்தி ஒன்றும் தெரியவில்லை. நடுக் கடலில் சுழிக்காற்று பலமாக அடித்த சமயம் கப்பல் ஒன்று தீப்பட்டு எரிந்ததைப் பார்த்ததாக மட்டும் இன்னும் சிலரும் கூறினார்கள்.

கோடிக் கரையை அடைந்ததும் கலங்கரை விளக்கத்தின் காவலர் தியாக விடங்கர் தம்மது எளிய வீட்டைப் பழுவேட்டரையர் தம்பதிகளுக்காக ஒழித்துக் கொடுப்பதாகச் சொன்னார். அதை ஏற்கும்படி மன்றாடிக் கேட்டுக் கொண்டார். கோடிக்கரையில் தங்குவதற்கு வேறு மாடமாளிகை கிடையாது. எனினும் நந்தினி அதை மறுத்து விட்டாள். கலங்கரை விளக்கிற்கு அருகில் கூடாரம் போட்டுக் கொண்டு தங்க விரும்புவதாகக் கூறினாள்.

அவ்வாறே கூடாரங்கள் அடிக்கப் பட்டன. சற்றுத் தூரத்தில் ஆங்காங்கு பழுவூர் பரிவாரங்களுக்கும் கூடாரங்கள் போடப்பட்டன.

கூடாரங்கள் அடித்து முடிந்தவுடனே கடலில் ஒரு பெரிய மரக்கலம் காணப்பட்டது. அது கரையோரமாக எவ்வளவு தூரம் வரலாமோ அவ்வளவு தூரத்தில் வந்து நின்றது.

அதைக் கண்டதும் பழுவேட்டரை





யரின் பரபரப்பு மிகுந்தது. கப்பலின் பாய்மரங்கள் சின்னுபின்னமாகியிருந்த திலிருந்து அது சுழிக் காற்றில் அகப்பட்டிருக்க வேண்டுமென்று தெளிவாயிற்று. அதில் இருப்பவர்கள் யார்? ஒரு வேளை இளவரசராயிருக்கலாமோ? புலிக்கொடி காணப்படாததில் வியப்பில்லை. சுழிக் காற்றில் அது பிய்த்து எறியப்பட்டிருக்கலாம் அல்லவா?

கப்பலண்டைப் போய்த் தகவல் தெரிந்துகொண்டு வருவதற்காகப் பழுவேட்

டரையர் அங்கிருந்த ஒரே ஒரு படகை அனுப்பி வைத்தார். கப்பலிலிருந்தவர்கள் படகுக்காகக் காத்திருந்ததாகத் தோன்றியது. உடனே இருவர் கப்பலிலிருந்து படகில் இறங்கினார்கள். அவர்களில் ஒருவன் பார்த்திபேந்திர பல்லவன்.

வந்தியத்தேவனைக் காப்பாற்றுவதற்காக மரக்கலத்திலிருந்து படகில் இறங்கிச் சென்ற இளவரசர் அருள்மொழி வர்மர் திரும்பக் கப்பலுக்கு வரவேயில்லை அல்லவா?

இதனால் பார்த்திபேந்திரன் எல்லையற்ற கவலைக்கு உள்ளாகித் தத்தளித்தான். காற்று அடங்கிப் பொழுது விடிந்த பிறகு அங்குமிங்கும் கப்பலைச் செலுத்தித் தேடினான். படகில் இளவரசருடன் இறங்கியவர்களில் ஒருவன் மட்டும் குற்றுயிராக அகப்பட்டான். அவன் வந்தியத்தேவனை இளவரசர் மிக்க தீரத்துடன் காப்பாற்றிய பிறகு படகுக்கு நேர்ந்த கதியைச் சொன்னான் இதனால் பார்த்திபேந்திரனுடைய துயரம் பன்மடங்கு ஆயிற்று. ஒரு வேளை கோடிக்கரை சென்று உயிருடன் ஒதுங்கியிருக்கக் கூடாதா என்ற ஆசை ஒரு பக்கத்தில் கிடந்து அடித்துக் கொண்டது.

ஆகவே கோடிக்கரை சென்று விசாரிப்பதென்று தீர்மானித்தான். அதற்காகவே கப்பலை அங்கே கொண்டு வந்து நிறுத்தச் செய்தான். படகில் இறங்கிய பிறகு கரையை நோக்கிப் போக ஆரம்பித்ததும் பெரிய பழுவேட்டரையர் தம் இளையராணி சகிதமாக அங்கு வந்திருப்பதை அறிந்து கொண்டான். இது அவனுக்கு மிக்க எரிச்சலை மூட்டியது.



ழுவூர் இளையராணி நந்தினியைப் பற்றி ஆதித்த கரிகாலர் கூறியவையும் நினைவுக்கு வந்தன. அவ்விதம் அந்த மகா வீரரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு அவரைப் பித்துப் பிடிக்க அடித்த மோகனாங்கி எப்படியிருப்பாள் என்று பார்க்கும் சபலமும் அவன் உள்ளத்தின் அடிவாரத்தில் ஒரு மூலையில் எழுந்தது. அந்த விருப்பம் விரைவில் வளர்ந்து கொழுந்து விடத் தொடங்கியது. ஒருவேளை அவளைப் பார்க்க முடியாமற் போய்விடுமோ என்ற கவலையும் உண்டாகிவிட்டது.

ஆனால் அந்தக் கவலை நீடித்திருக்கவில்லை. படகிலிருந்து கரையில் இறங்கியதும் நேரே பழுவேட்டரையரின் கூடாரத்துக்குப் பார்த்திபேந்திரனை அழைத்துப் போனார்கள். கூடாரத்தின் வாசலில் பழுவேட்டரையர் கம்பீரமான தோற்றத்துடன் நின்று கொண்டிருந்தார். ஆஜானுபாகுவான அந்த வீராதி வீரரைக் 'கிழவர்' என்று சொல்லுவது எவ்வளவு பெரிய தவறு என்று பார்த்திபேந்திரன் எண்ணினான். அவன் பார்த்திருக்கும் எத்தனையோ இளம் பிராய வாலிபர்களைக் காட்டிலும் அவர் தேகக் கட்டும் மனோதிடமும் வாய்ந்த புருஷ சிங்கமாகக் காட்சி அளித்தார்.

இவ்விதம் அவன் எண்ணிக் கொண்டிருக்கும் போதே கூடாரத்துக்கு உள்ளேயிருந்து மங்கை ஒருத்தி வெளி வந்தாள். மேகங்களுக்குப் பின்னாலிருந்து மின்னல் தோன்றுவது போல் அந்தப் பொன் வண்ணப் பூவை கண்ணைப் பறிக்கும் ஒளியுடன் திகழ்ந்தாள். நெடிது வளர்ந்து உரம் பெற்ற தேக்கு மரத்தின் பேரில் படர்ந்திருக்கும் அழகிய பூங்கொடியைப் போல் அவள் பழுவேட்டரையருக்கு முன்னால் வந்து நின்றாள். அந்தப் புவன மோகினியைக் கண்டு திகைத்து நின்ற பார்த்திபேந்திரன் பேரில் தனது வேல் விழிகளைச் செலுத்திய வண்ணமாக அவள் "நாதா! இந்த வீர புருஷர் யார்? இவரை நான் இதுவரையில் பார்த்ததில்லையே?" என்று சொன்னாள். பொற்கிண்ணத்திலிருந்து அருந்திய மதுபானத்தைப் போல் அவளுடைய கிளி மொழிகள் பார்த்திபேந்திரனைப் போதை கொள்ளச் செய்தன.

(தொடரும்)

# இதர எல்லா ஹேர் டைகளையும் சேர்த்தாலும் அவற்றைவிட ஏராளமான மக்கள் உபயோகிப்பது கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர் டை

அவற்றிற்கான 3 சிறந்த காரணங்கள்




இரண்டு கேசகால் சாயல்களில் கிடைக்கிறது: பிளாக் மற்றும் டார்க் பிரவுன்

**1** கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டை கேசத்திற்கு இயல்பான வண்ணத்தையும், தோற்றத்தையும் தருகிறது. இதிலே ஒரு உள்ளிணைந்த கண்டிஷனர் உள்ளது: இது கேசத்தை மென்மையோடும் படிமானத்தோடும் வைத்துக்கொள்ள உதவுகிறது. உண்மையிலேயே, நீங்களே சொன்னால் ஒழிய ஒருவரும் அறிந்துகொள்ள முடியாது.

**2** இதர ஹேர் டைகளைப் போல் அல்லாமல், கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டை உபயோகிக்க எளிதானது, வசதியானது. ஆம், இது உங்கள் கேசத்தை ஷாம்பூ செய்வதுபோல் சுலபமானது.

**3** கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டையின் தரத்தைப் பற்றி நீங்கள் உறுதிப்படுத்திக்கொள்ள முடியும். காரணம், இது உங்கள் கேசத்தை பாதுகாக்கும். வண்ணம் விசேடமாகத் தயாரிக்கப்பட்டது. முழுமையான பாதுகாப்பு— இதுவே, கோத்ரெஜின் உறுதியளிப்பு.

**கோத்ரெஜ்** ® வழங்கும் தானே-பரவும் பெர்மனென்ட் ஹேர் டை.



# சமைக்கத் தெரிஞ்சவன்

அழகரசன், ஆசையோடு முதுநிலைப் பட்டம் வாங்கி, ஐந்தாவது ஆண்டு நிறைவு விழாவைக் கொண்டாட இருக்கின்றவன். 'ஏதாகிலும் ஒரு வேலை' என்ற குறிக்கோளுடன் முயன்று, முயன்று... ஒரு தாடிக்குச் சொந்தக்காரனாகிவிட்டான். எல்லோரின் அலட்சிய மற்றும் பரிதாபப் பார்வைகளையும் வாங்கிச் சட்டைப் பையில் போட்டுக் கொள்ளப் பழகிவிட்டவன்.

இப்போது, அம்மா தொடுக்கப் போகும் அடுத்த கணையை எதிர்கொள்ளக் காத்திருப்பவன்.

கணை கர்ஜனைக்கு ஈடாகப் பாய்ந்து வந்தது. ''ஏண்டா தெண்டத் தீனி! கடன்காரா! உதவாக்கரை! ஊர்சுத்தி! உருப்படாத ஜன்மம்! ஊர் வம்பு நாயே! (இதுவரை பல்லவி. இனி அனுபல்லவி) வீட்ல சும்மாத்தானே கிடக்கறே, எருமை. கொஞ்சம் சமையலைக் கவனிச்சுக்கிட்டா என்ன குறைஞ்சா போயிடுவே?''

ஆசிரியை வேலை பார்க்கும் அம்மாவுக்கு, அடுக்கு மொழியில் திட்டுவதென்றால் அல்வா!

'சமையலா? நானா?' — கேட்க நினைத்து, பின் அந்த எண்ணத்தையே அறுவடை செய்தான் அழகரசன்.

பழக்கம் இல்லாவிட்டாலும், பணிய



வேண்டிய நிலை அவனுக்கு.

பணிந்தான், சாஷ்டாங்கமாக.

விறகுக்குப் பதில் விரலை விட்டான். எண்ணெய் ஊற்றிக் கைவெந்தான். சட்டினியின் காரம் சாப்பிட்டவரையெல்லாம் அலற வைத்தது.

எப்படியோ, ஒருவழியாகச் சமையல் கலையில் சக்கரவர்த்தி ஆகிவிட்டான் அழகரசன். புதிய பண்டங்களைக் கண்டுபிடிக்கும் அளவிற்கு (உதாரணம்: அல்வா புட்டு) சமையல் ஞானியானான்.

ஆனால், இன்னும் வேலைதான் கிடைத்தபாடில்லை.

அவனுக்கு ஜோசியத்தில் நம்பிக்கை கிடையாது.



என்றாலும், எம்ப்ளாய்மெண்ட் ஆபீஸ் வாசலில் ரேகை மேப்புக்கு முன்னால், லென்சும் கையுமாக நின்று ஸ்நேகமாகச் சிரித்தவனிடம் ஒதுங்கினான் அழகரசன்.

சுற்றும், முற்றும் திருதிருத்தபடி கையை நீட்டினான்.

"இந்தக் கை இல்லை. அந்தக் கை."

கோபப்படாமல் மாற்றி நீட்டினான்.

லென்சின் வழியாக, அவன் கையை அஷ்ட கோணங்களில் உற்றுப் பார்த்தான் ஜோதிடன். அதிர்ஷ்டம் மறைந்திருக்கும் கோடுகளைத் தேடினான்.

இறுதியில் 'இச்சுக்' கொட்டினான். தலையை இரங்கல் தெரிவிப்பது போலத் தாழ்த்தினான். முகத்தை முந்நூறு கோணலாக்கினான். ஒரு தூக்குத் தண்டனைக் கைதியைப் பார்ப்பது போல அழகரசனைப் பார்த்தான்.

"அட, என்ன எழவுன்னுதான் சொல்லித் தொலையேனய்யா," எனச் சீறினான் அழகரசன். ஜோசியனுக்குக் கேட்கா வண்ணம் பற்களைக் கடித்தான்.

அவன் உள்ளங்கையிலிருந்து தொடங்கி, மேடு, மேடாக வர்ணித்தான் ஜோசியன். கோட்டுக்குக் கோடு கதையளந்தான். முடிவில், தன் பால்பாயிண்ட் பேனாவின் அடியால், அழகரசனின் கையில் ஒரு கற்பனைக் கோடு வரைந்தான்.

சொன்னான்: "இப்படி ஒரு லைன் போய் இருந்தா, தம்பிக்குப் போன தையிலேயே உத்தியோகம் கிடைச்சிருக்கும்..." தன் மேதா விலாசம் தெரியச் சிரித்தான்.

"அதான் இல்லையே! வீணா எதுக்குச் சிரிக்கறே? வேணும்னா, அந்த லைனை பிளேடால கிழிச்சு விட்டுடேன்," என ஆத்திரம்பொங்க நடையைக் கட்டினான் அழகரசன்.

வழக்கம்போல, நேராக நூலகம்.

பத்திரிகைகளை மேய்ந்தான்.

கவர்ச்சியான சம்பளம் எனக் கூறிய சில ஏமாற்றுக்கார விளம்பரங்கள். அனைத்தையும் புறக்கணித்தான்.

விரக்தியோடு பேப்பரை விட்டெறியப் போனவனின் விழிகளில் ஒரு வினாடி தெரிந்தது அந்த விளம்பரம்.

கூர்ந்தான்.

'நல்ல அழகுள்ள, நன்கு சமைக்கத் தெரிந்த, இருபத்தியொரு வயது நிரம்பிய வேலையற்ற பட்டதாரிப் பெண்ணுக்கு, நல்ல சம்பளத்துடன் கூடிய மாப்பிள்ளை தேவை.'

அதையே பலமுறை படித்தான் அழகரசன். ஆனால், எதற்காகப் படிக்கின்றோம் என்று அவனுக்குப் புரியவில்லை. என்றாலும், அந்த வரி விளம்பரத்தில் தனக்கென்று ஒரு செய்தி ஒளிந்திருப்பதாக அவன் உள்ளுணர்வு கூறியது.

ஒளிந்துதான் இருந்தது.

முடிவில் அவன் மூளையில் ஒரு 'பளீர்' (ஐடியா) இருந்தாலும் ஒரு தயக்கம்.

இராஜா பாலச்சந்தர்

# இவர்தான் முதல்வர்!



தமிழகத்தின் அடுத்த முதல்வராக யார் வர வேண்டும் என்று விரும்புகிறீர்கள்? ஏன்?

கட்சியின் கொள்கைகளை மட்டுமின்றித் தலைவரின் சிறப்புகளையும் அலசிக் கல்கியில் ஒரு பக்கத்துக்கு மேற்படாத அளவில் எழுதி அனுப்புங்கள். பிரசுரமாகும் ஒவ்வொரு கட்டுரைக்கும் பரிசு ரூ. 50/—

அதிகபட்சமான கல்கி வாசகர்கள் யாரை முதல்வராகத் தேர்ந்தெடுக்கிறார்கள் என்ற ருசிகரமான தகவலும் வெளியிடப்படும்.

**முடிவு தேதி: மார்ச், 31.**

பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கட்டுரைகளைத் திருப்பி அனுப்புதல் இயலாது. உறை மீது ''இவர்தான் முதல்வர்'' என்று குறிப்பிடவும். ஏப்ரல் 17 புத்தாண்டு மலர் தொடங்கி ஒன்றன் பின் ஒன்றாகக் கட்டுரைகள் பிரசுரமாகும்.

— ஆசிரியர்

---

யோசித்தான்.

நீண்ட சிந்தனைக்குப் பிறகு, தயக்கத்தை அலட்சியம் செய்து, 'பளீரை' நிறைவேற்றுவது எனத் துணிந்தான்.

பத்திரிகை அலுவலகத்தை நோக்கி நடந்தான்.

**ம**றுநாள்.

காலையிலேயே எழுந்தான் அழகரசன். கடைக்குப் போனான். ஒரு தினசரியை வாங்கினான். தேடினான்.

அவன் கொடுத்த விளம்பரம் அழகாக அச்சாகி இருந்தது.

இப்படிக் கூறியது விளம்பர வாசகம்: 'நல்ல அழகுள்ள, நன்கு சமைக்கத் தெரிந்த இருபத்தேழு வயது நிரம்பிய வேலையற்ற பட்டதாரிப் பையனுக்கு, நல்ல சம்பளத்துடன் கூடிய மணமகள் தேவை.'

பத்திரிகையை மடித்து வைத்துவிட்டு, சமையலைக் கவனிக்கப் போனான் அழகரசன்.

**கா**லை பத்து மணி.

வீட்டில் எல்லோரும் வேலைக்குப் போய் விட்டனர். தம்பி, தங்கைகள் பள்ளிக்கூடம்.

தனியாக இருந்தான் அழகரசன்.

தாளிப்பதற்காக வெங்காயம் உரித்தான். கண் எரிச்சல் கண்டது. நீர் வழிந்தது. கைலியால் துடைத்துக் கொண்டான். வேலையைத் தொடர்ந்தான்.

வெளிக்கதவு தட்டப்பட்டது.

யாராக இருக்கும்?

எழுந்து சென்று திறந்தான்; அதிர்ந்தான். ஒரு தக்காளிப் பழம் உதடு விரியச் சிரித்தபடி நின்றிருந்தது.

நீளக் கூந்தல். மஞ்சள் முகம். வளைந்த நெற்றி. வாகான நாசி. கரிய விழிகள். கற்கண்டுக் கன்னங்கள். முத்துப் பற்கள். மூங்கில் தோள்கள். சிற்ப மேனி. சிவப்புத் தோல். சிறிய இடை....

'என்னடா இது வம்பாப் போச்சு?' — உடல் நடுங்கினான் அழகரசன். 'நெஜமாவே வந்துட்டாளே ஒருத்தி?'

''நான் ஷகிலா.''

''ஹிஹி....''

''நீங்க... அழகரசன், கரெக்ட்?''

''ஹிஹி....''

கைப்பையை விரித்துக் காகிதச் சுருளை இழுத்தாள் ஷகிலா. விரித்தாள். ''இந்த விளம்பரத்தை நீங்கதானே கொடுத்தீங்க?''

''ஆமாம்....''

''ஆல்ரைட். நான் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் சம்பாதிக்கிறேன்.''

கைகளைக் கட்டிக் கொண்டு அடிமை போல் நின்றான் அழகரசன்.

ஷகிலா தொடர்ந்தாள்: ''உங்களுக்கு நல்லா சமைக்கத் தெரியுமா?''

குரலில் மிளகாகக் கலந்திருந்தது மிடுக்கு.

''தெ.... தெரியுங்க.''

''சந்தோஷம். என்ன என்ன சமைக்கத் தெரியும்?'' என்று கேட்டபடி, அழகரசன் துடைத்துப் போட்ட நாற்காலியில் ஒயிலாக அமர்ந்தாள்.

''எல்லாமே சமைக்கத் தெரியுங்க. உங்களுக்கு வாய்க்கு ருசியாச் சமைச்சுப் போடுவேங்க...''

''வெரி குட். உங்களுக்குச் சமைக்கத் தெரியும்னு நான் எப்படி நம்பறது?''

உடனே, இண்டர்வியூவில் சான்றிதழ்

களைக் காட்டுவது போல, தனது பத்து விரல்களையும் பணிவுடன் விரித்து அவளுக்குக் காட்டினான் அழகரசன்.

சூடுபட்டதால், எல்லா இடமும் தடிப்பேறி இருந்தது. அதைப் பரிசோதித்துப் பார்த்த ஷகீலாவுக்குப் பூரண திருப்தி. "போய் லெட்டர் போடறேன்."

அடுத்த சில வாரங்களில், ஆயிரத்திற்கும் மேலே சம்பாதிக்கும் ஷகீலா என்கிற மனைவிக்கு, கணவனாக வாழ்க்கைப்படும் பாக்கியம் பெற்றான் அழகரசன்.

சீமாரான மெத்தை வீடு. சுற்றிலும் தென்னை. கண்கவர் பூக்கள் வரவேற்க, அந்தக் கார் வந்து நின்றது.

முதலில் இறங்கியவள் ஷகீலாதான், "ம், இறங்குங்க. இதுதான் நாம தனிக்குடித்தனம் நடத்துறதுக்காக நான் ஏற்பாடு செய்திருக்கிற வீடு. என்ன பிடிச்சிருக்கா?"

"ம்..." என்றபடி இறங்கினான் அழகரசன்.

"உள்ளே வாங்க."

வலது காலை எடுத்து வைத்தான்.

சோபாவில் சென்று அமர்ந்தாள் ஷகீலா. கை, கால்களை விரைத்துச் சோம்பல் முறித்தாள். அழகரசனைப் பார்த்துச் சிரித்தாள். "ஒரே டயர்டா இருக்கு, காப்பி சாப்பிடணும் போல இருக்கு."

புரிந்து கொண்டான் அழகரசன்.

சுற்று முற்றும் பார்த்தான், இரண்டு அறை தள்ளிச் சமையல் அறை தெரிந்தது. ஒப்பந்தப்படி அதை நோக்கி, அடக்கத்துடன் நடந்தான்.

அவனையே அமைதியாகக் கவனித்துக் கொண்டிருந்தாள் ஷகீலா.

தீப்பெட்டியைத் தேடி எடுத்தான். ஸ்டவ் திரிகளை உயர்த்திப் பற்ற வைத்தான். தவறுதலாக விரலைச் சுட்டுக் கொண்டு 'வெடுக்' கென இழுத்தான்.

பதற்றத்தோடு ஓடிவந்து அவன் கையைப் பிடித்துக் கொண்டாள் ஷகீலா. பாசம் பொங்க அவனைப் பார்த்தாள். கனிவுடன் கூறினாள், "நீங்க எனக்குச் சமைச்சுப் போடணும்கறதுக்காக நான் உங்களைக் கல்யாணம் செய்யலே."

அசட்டுத்தனமாக அவளை நோக்கினான் அழகரசன்.

ஷகீலா தொடர்ந்தாள்: "பிறகு எதற்காக அப்படி சொன்னேன்னு கேட்கறீங்களா? நம்ம நாட்டில் பெண்கள் ரொம்பவும் கஷ்டப்பட்டுச் சமையல் செய்து, ஆசையா கணவனுக்குப் பரிமாறுவாங்க. ஆனா, கணவன்மார்கள் அந்த உணவை அலட்சியப்படுத்தி, குறைசொல்லுவாங்க. நல்லா இல்லேன்னு சில ஜென்மங்கள் மனைவியை அடிக்கிறதும் உண்டு. காரணம், அவங்களுக்குச் சமையல் செய்யறதுல இருக்கிற கஷ்டம் கொஞ்சம் கூடத் தெரியறதில்லே."

'ஆம்', என்பது போலத் தலையசைத்தான் அழகரசன்.

"அதனால்தான், நல்லாச் சமைக்கத் தெரிஞ்ச — அதாவது சமைக்கிறதுல இருக்கிற கஷ்டம் புரிஞ்ச — உங்களை நான் திருமணம் செய்துக்கிட்டேன். வேறே எந்தக் காரணத்துக்காகவும் இல்லேங்க. மற்றபடி, வீட்டு வேலைகளை நாம ரெண்டு பேருமே பகிர்ந்து செய்யலாங்க... நீங்க எதைப்பற்றியும் கவலைப்படாமல் வேலை தேடுங்க, என்ன?" ஆதரவாகப் பேசினாள் ஷகீலா.

கண்கள் நனைய, தன் மதிப்பிற்குரிய, மனைவியை வாரி அணைத்துக் கொண்ட அழகரசனின் மனத்தில் ஓராயிரம் கவிதைகள்....

---

"ஜெயிச்சு, எம். எல். ஏ.வாகிப் போன நாளிலிருந்து இன்றைய தேதி வரைக்கும் தொகுதிப் பக்கம் எட்டிக்கூடப் பார்க்காதவருக்கா, திரும்பவும் ஓட்டுப் போடப் போறீங்க...?"

"ஆமா; இன்னும் ஒரு அஞ்சு வருஷத்துக்கு நாங்க நிம்மதியா இருக்கணும்னு அதுதான் ஒரே வழி..."

— கரடிகுளம் ஜெயாபாரதிப்பிரியா.





தயாரிப்பாளர்: கட்சிப் பூசலை வைத்து ஒரு படம் பண்ணலாம்னு இருக்கேன், நல்ல தலைப்பாச் சொல்லுங்க.

கதாசிரியர்: இதயக்கனியும், பால்கனியும்.

— ர. குமார்.

திருச்சி மாவட்ட ரீ — விசிட்:

# நம்பிக்கை தருகிறார் புது கலெக்டர்!



* உஜாகர் சிங்: நம்பிக்கை தரும் புது கலெக்டர்.

சென்ற ஆண்டு மே மாதம் 24.5.87 மற்றும் 31.5.87 தேதியிட்ட இரு 'கல்கி' இதழ்களிலும் வெளியிடப்பட்ட திருச்சி மாவட்டக் கட்டுரைகளில் சுட்டிக்காட்டப்பட்ட பிரச்னைகள் இப்போது எந்த அளவுக்குத் தீர்க்கப்பட்டிருக்கின்றன? அதுபற்றி வந்திருக்கும் வாசகர் கடிதங்களில் சில:

''இப்போது வந்து எங்கள் லால்குடி அரசு மேல்நிலைப் பள்ளியைப் பாருங்கள். புது ஹெச். எம். மாணவர்களுக்குச் சிறந்த முறையில் வசதிகள் பல செய்து கொடுத்துள்ளார். நூற்றாண்டு விழாவும் விரைவில் நடைபெறுவதாக அறிவித்துள்ளார். மேலும் இப்போது 'கோயிலிலும் கட்சி சார்பு இல்லாமல் சிறந்த பக்திமான்களைத் தேர்ந்தெடுத்து, கமிட்டி அமைத்தாகிவிட்டது, கும்பாபிஷேகத்திற்கு...'' என்கிறார் குமரகுருபரன்.

திருவெறும்பூர் பர்மா—இலங்கைத்தமிழர் மறுமலர்ச்சிக் கழகத்தின் பொதுச் செயலாளர் எழுதுகிறார்: 'பாப்பாக்குறிச்சி, காட்டூர், நாவல்பட்டு பர்மா காலனி, குண்டூர் பர்மா காலனி, விமான நிலையம் காலனி — இவற்றில் இப்போது முழுப் பட்டா வினியோகம் செய்து விட்டார்கள். ஓரளவுக்குக் குடிநீர்த் தட்டுப்பாடும் தீர்க்கப்பட்டுள்ளது. திருச்சி வட்டாட்சியர் அலுவலகம் வேறு இடத்திற்கு மாற்றலாகும் அடிப்படை முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. தற்பொழுது திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவராக உஜாகர் சிங் நியமிக்கப்பட்டுள்ளார். திருச்சி மாவட்ட நிர்வாகத்தில் மிகவும் கண்டிப்புடன் நடந்து கொள்கிறார். திருச்சியில் ஓடும் ஆட்டோ ரிக்ஷாக்களுக்கு மீட்டர் பொருத்தப்பட வேண்டும் என்றும் இப்போது எச்சரிக்கை செய்யப்பட்டுள்ளது. திருச்சி நகரத்திலுள்ள நகராட்சிப் பூங்காக்கள் மிக மோசமான நிலையில் இல்லாமல், உபயோகமான நிலையில் உள்ளன. பூச்செடிகளுக்குத் தற்பொழுது வண்டிகள் மூலமும் குழாய்கள் மூலமும் தண்ணீர் விட்டுப் பராமரிக்கப்படுகிறது. ஆனால் இவை தவிர மற்ற குறைகள் நிவர்த்தி செய்யப்படவில்லையே?'

அய்யப்பா நகர் நலச் சங்கப் பொருளாளர் கிருஷ்ணமூர்த்தி: 'கல்கி நிருபர்கள் அய்யப்பா நகருக்கு விசிட் செய்ய வந்த அன்றே, பேரூராட்சி லாரிகள் மூலம் தண்ணீர் வினியோகம் ஆரம்பித்து விட்டது. இது அக்டோபர் 87—வரை நீடித்தது. தற்போது நகரின் பல இடங்களில் இரும்புத் தொட்டிகள் வைத்துத் தற்காலிகமாகத் தண்ணீர்



அண்ணா நகர்: பிரச்னை தீரவில்லை.



* அய்யப்பா நகர்:
குடிநீர்ப் பிரச்னை தீர்ந்தது.



விநியோகம் செய்யப்பட்டு வருகிறது!

"கரூர் பிரச்னைகளில் முன்பு திறக்கப் படாமலிருந்த புதிய பஸ் நிலையம் இப்போது திறக்கப்பட்டுள்ளது!'' என்று மகிழ்ச்சியோடு தெரிவிக்கிறார் மாயனூர் ஸ்காட் தங்கவேல். ஆனாலும், இவரது வருத்தம், கரூர் நகராட்சியால் காவேரி ஆற்று நீரைக் கரூருக்குக் கொண்டு வரும் திட்டத்தை நகர் மன்றம் நிறைவேற்றி, அதற்குரிய தொகையில் ஒரு பகுதியைச் செலுத்தியும் தமிழக அரசு செயல்படுத்தாமல் இருப்பதுதான்.

இனி, சற்றே காரசாரமான விவாதங்களுக்கு உள்ளான விஷயங்களுக்கு வருவோம்:

•• அந்தநல்லூர் அக்ரஹாரத்தின் கோடியில் இருக்கும் கோபால கிருஷ்ண பெருமாளுக்கு வடகலையோ, தென் கலையோ — ஒருவிதமான திருமண்ணும் இடாமல் நின்று போயிருக்கும் பிரச்னையில் முன்பு நாம் சந்தித்த எல்லோரையும் (ராமமூர்த்தி ஐயரையும், கிருஷ்ணமூர்த்தி பட்டரையும் தவிர) மறுபடியும் இந்த ரீ — விசிட்டில் சந்தித்தோம். இந்த விவகாரம் குறித்து முதலில் 'கல்கி'க்குக் கடிதம் எழுதிய இளையூர் சேகர் இக்கட்டுரை ('எப்போது ஓயும் நாமச் சண்டை?') வெளிவந்ததில் தமக்குத் திருப்திதான் என்றார். அப்படியானால் இளையூர் முரளியைச் சேர்ந்த தென்கலை யாருக்கு? அதிருப்தி மட்டுமல்ல; கோபமும் கூட. 'இதைப் பத்திரிகையில் போட்டதே எங்களுக்கு விருப்பமில்லை. இந்தச் சண்டையை ஓயாமல் பண்ணுவதே இந்தப் பத்திரிகைகள்தான்!' என்கிறார் இவர்.

"பெருமாளின் தங்கத்தாலான உடைந்து போன நாமத்தை ராமமூர்த்தி அய்யரும் நாராயணசாமி சாஸ்திரிகளும் சேர்ந்து முதல் விசிட்டின் போது உங்களிடம் எப்படி காண்பித்தார்கள்? இதுவோ எண்டோமெண்ட் கோயில். அர்ச்சகர் கஸ்டடியில், எல்லா ஆபரணங்களும் லாக்கரில் இருக்கிற போது எப்படி சார் காட்ட முடியும்? அர்ச்சகரிடம் ஒரு சாவி, நிர்வாக அதிகாரியிடம் ஒரு சாவி என்று இருக்கும் போது அது எப்படி சாத்தியம்? அர்ச்சகரை மிரட்டி, தங்க நாமத்தைக் கொண்டுவரச் சொல்லித் தானே காண்பித்திருக்கிறார்கள்?'' என்று சற்றே ஆவேசமாகக் கேட்டார் முரளி.

சரி, தற்போதைய நிலைமை என்ன?

அந்தநல்லூர் அக்ரஹாரத்தில் 'மெஜாரிட்டி'யாக உள்ளவர்கள் தென்கலை வகுப்பினர். கோவிலில் ஆண்டாண்டு காலமாகத் தென்கலை சம்பிரதாய முறையே நடைபெற்று வருகிறது. இதைக் கிராமத்தார் ஆட்சேபித்தது இல்லை. மேற்படி கோயில், பெருமாளுக்குத் தென்கலை திருமண் காப்புச் சாற்றுவதில் எனக்கு ஆட்சேபனை எதுவும் இல்லை என்று கோயில் நிர்வாக அதிகாரியிடம் எழுதிக் கொடுத்திருப்பதுடன், தென்கலை திருமண் காப்புச் சாற்றுவதில் எனக்கு எந்தவித ஆட்சேபனையும் இல்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன்' என்று இந்து அறநிலையத்துறை ஆய்வாளரிடம் வாக்குமூலம்

* சேகர்:
இவருக்குத் திருப்தி.





* சாமி அய்யா:
இவருக்குப் பாராட்டு.



கொடுத்திருக்கிறார் அர்ச்சகர். இந்தச் சர்ச்சையில், எண் OA/5/85 தேதி 11.8.86 தேதியிட்ட டெபுடி கமிஷனரின் தீர்ப்பில், பல வருடங்களாக வழக்கத்தில் இருந்து வரும் தென்கலை சம்பிரதாயமே தொடரட்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார். இதை எதிர்த்து ஸ்மார்த்தர்கள் அறநிலையத் துறைக்கு அப்பீல் செய்திருக்கிறார்கள். 'ஸ்டே' கேட்டுப் பார்த்தார்கள். கமிஷனர் ஸ்டே வழங்க மறுத்து விட்டார். விசாரணை நாள் 28.4.87 – லிருந்து ஒவ்வொரு காரணத்துக்காகத் தள்ளிப் போடப்பட்டு வருகிறது. ஒட்டு மொத்தமாகத் திருப்பணிக் கமிட்டி தென்கலைத் திருமண்ணை இட வேண்டும் என்று ஒருமனதாக வேண்டுகோள் விடுத்தும், சம்ப்ரோக்ஷணம் ஆகாமல் இன்னமும் பெருமாள் திருமண் காப்பு எதுவுமின்றியே இருந்து வருகிறார்! இப்போதைக்கு ஓயுமென்று தெரியவில்லை!

•• திருச்சியிலுள்ள அண்ணா நகர் முன்னேற்றச் சங்கச் செயலாளராக இப்போது புதிதாக வந்துள்ள அப்பாவு மிக வருத்தத்துடன் சொன்னார்:

''பிளாட் விற்கிற போது ஒரு முறை. பிறகு சாக்கடை – ரோடு போட என்று இரண்டாவது முறையாக டெவலப்மென்ட் சார்ஜ் வசூலித்தார்கள், சார். கிட்டத்தட்ட 35 லட்ச ரூபாய். இதை மேற்படித் திட்டங்களுக்கு உபயோகப்படுத்தாமல் வங்கியில் அப்படியே போட்டுவிட்டு, ஒரு சிறிய கூட்டுறவுச் சங்கம் அதிகமான வைப்பு நிதி வைத்திருப்பதாகக் காட்டிப் பரிசு வாங்கிக் கொண்டார்கள்!

''ரோடுகளில் சுக்கா மண்ணைக் கூடக் கொட்டாமல், செம்மண்ணைக் கொட்டியிருக்கிறார்கள். 1.7.86 முதல் 30.6.87 முடிய, 7.95 லட்சம் செலவழித்திருப்பதாகச் சொல்லிக் கொள்கிறார்களே தவிர, வேலையின் அளவு எவ்வளவு என்று சொல்லவில்லை. எந்தத் தீர்மானத்தையும் படிப்பதோ, ஏற்றுக் கொள்வதோ இல்லை. கடன் வேண்டி மனுச் செய்பவர்களிடம் கட்டாயமாக சூபர்விஷன் சார்ஜ் வசூலிக்கிறார்கள் சொசைடியினர்.



அந்தநல்லூர் அக்ரஹாரம்: சண்டை முடியவில்லை!

மூன்று வருஷங்களுக்கு ஒரு முறை தேர்தல் வைக்க வேண்டும். பன்னிரண்டு வருஷங்களாகின்றன. இன்னும் வைக்கவில்லை!

''அதிகாலை மூன்று மணியிலிருந்து மாலை வரை எப்போது வேண்டுமானாலும் லாரியில் தண்ணீர் கொண்டு வருவார்கள். நாம் ஓடிப்போய்ப் பிடித்துக்கொள்ள வேண்டும். சாக்கடை கட்டவில்லை; எஸ்டிமேட்டே அனுப்பவில்லை. அதற்குள் எங்களைக் காம்பவுண்டு சுவர் கட்டத் தாக்கீது விட்டிருக்கிறது, சொசைடி! 534 வீடுகளும் இப்போதைக்கு சொசைடிக்குத்தான் சொந்தம். ஆமாம் சார், இன்னும் **Sale Deed** தரவேயில்லை! சொத்தை அடமானம் வைத்து ஆயிரம் ரூபாய் கடன்கூட எங்களால் வாங்க முடியாது! ஒரு வீடு கட்டும் சொசைடி பதினைந்து வருடங்களில் தன் பணியை முடித்து விட்டு மூடப்பட வேண்டும். இங்கே என்னடாவென்றால் இன்னும் நடந்து கொண்டேயிருக்கிறது!'' என்றார் அப்பாவு.

•• திருச்சி அருகிலுள்ள அய்யப்பா நகரில், அதன் (கே. சாத்தனூர்) பேரூராட்சித் தலைவர் சாமி ஐயாவைச் சந்திக்குமுன், சில வீடுகளில் தண்ணீர் வசதி பற்றிக் கேட்டபோது, ''இப்போது பரவாயில்லை. தண்ணீர் தாராளமாகக் கிடைக்கிறது'' என்றே சொன்னார்கள்.

சாமி ஐயாவைச் சந்தித்தோம். முன்பு நமக்கு வேண்டாதவர்கள் கொடுத்த பேட்டியில் குறிப்பிட்டுள்ள குற்றச்சாட்டுக்களை இப்போதும் மறுத்தார். பிறகு, முன்பு இருந்த இரண்டு தண்ணீர்த் தொட்டிகளோடு, தாம் தலைவராக வந்த பிறகு அய்யப்பா நகரில் வைத்த ஏழு தொட்டிகளையும் அழைத்துப் போய்க் காண்பித்தார். தம் பேரூராட்சியிலேயே அய்யப்பா நகருக்குத்தான் தண்ணீருக்காகப் பல லட்சம் ரூபாய் செலவழித்ததையும் குறிப்பிட்டார்.

''அத்தனை வீடுகளுக்கும் பைப்லைன் மூலம் வீட்டு இணைப்புச் செய்துதர முடியும். அதற்குத் தேவை ஒரு பெரிய ஓவர்ஹெட் டாங்க்; இரண்டு சம்ப்கள். இதைக் கட்டுவதற்கான அதிகாரம் பஞ்சாயத்துக்கு இல்லை. குடிநீர் வடிகால் வாரியம்தான் செய்ய வேண்டும். வாரியம் என் கருத்தை ஏற்றுச் செயல்பட்டாலும், அல்லது குடிநீர்த் தொட்டிகள் கட்டுவதற்குப் பஞ்சாயத்துக்கு அதிகாரம் வழங்கினாலும், அய்யப்பா நகர்



"அடடா! அழகான உங்கள் பங்களாவின் காம்பவுண்ட் சுவரை நீங்களே இடிச்சுத் தள்ளுறீங்களே! ஏன் சார்?"

"தேர்தல் கோஷங்கள் எழுதுவதையும்; போஸ்டர் ஒட்டுவதையும் தடுக்க வேறு வழி தெரியலே."

— சுதர்ஸன்.

வாசிகளுக்கு வீட்டு கனெக்ஷன் வழங்க முடியும். ஒரு கோடியே எழுபது லட்சம் ரூபாய்த் திட்டத்தில் கே. சாத்தனூர் மற்றும் பிராட்டியூர் பேரூராட்சிகளுக்கு, கூட்டுக் குடிநீர்த் திட்டம் வாரியத்திடம் உள்ளது. இதை விரைவாகச் செயல்படுத்தினால் இந்தப் பிரச்னை உடனே தீரும்!" என்றவர், முன்பு விதிகளை மீறி வெட்டிய மரங்கள் பற்றிய பிரச்னையிலும் நிர்வாக அதிகாரியின் கவனமின்மை காரணமாக ஏற்பட்ட தவறையும், மீட்ட மரங்களை அப்படியே மறு ஏலத்திற்கு வைத்திருப்பதையும் காண்பித்தார். பாராட்டி விட்டு விடைபெற்றோம்.

•• துறையூருக்குப் போய் மதுராபுரி எக்ஸ்டென்ஷனைத் தேடினால், "அது இப்போது இந்திரா நகர் சார்" என்றார்கள். ஓய்வு பெற்ற டெப்டி போஸ்ட்மாஸ்டர் ஜீவானந்தத்தின் திருடு போன நகைகள் கிடைத்தனவா என்று விசாரித்த போது, "க்ரைம் இன்ஸ்பெக்டர் வந்து பார்த்தார். முயற்சி பண்ணுகிறோம். 'போலீசுக்கும் சில கஷ்டங்கள் இருக்கிறது என்பதை நான் உணர்கிறேன்' என்று என்னிடம் ஒரு ஸ்டேட்மென்ட் வாங்கிக் கொண்டு போனார்கள்! ஸ்பெஷல் ஸ்க்வாடு போட்டு வேலை செய்வதாகச் சொன்னார்கள். அதற்கப்புறம் எந்தத் தகவலும் இல்லை" என்றார் அவர்.

துறையூர் போலீஸ் ஸ்டேஷனில் விசாரித்த போது முன்பு போலவே இப்போதும் க்ரைம் இன்ஸ்பெக்டர் இருக்கவில்லை. ஒரு சப் – இன்ஸ்பெக்டர் மட்டுமே இருந்தார். நாம் வந்த விவரத்தைச் சொல்லிவிட்டு, ஏதாவது முன்னேற்றம் இருக்கிறதா என்று விசாரித்த போது, "நான் சமீபத்தில்தான் ஒரு வருடம் முன்புதான் வந்தேன். எனக்கு இது விஷயமாக எதுவும் தெரியாது" என்றார்.

முதல் பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயித்த விஷயத்தை (எத்தனை மகிழ்ச்சியான விஷயம்!) நகைகள் எல்லாம் பறிபோன வருத்தத்தோடு தெரிவித்த ஜீவானந்தம் தம்பதியின் முகங்கள் நினைவில் வந்து போயின.

இன்னும் துறையூரில் மாலை மங்கிய உடனேயே சங்கிலி, தாலிக் கொடி பறிப்புச் சம்பவங்கள் நிகழ்ந்து வருவதைப் பலர் தெரிவித்தனர். ஆக, இழந்ததை மீட்பதில் மட்டுமல்ல; இனியும் மக்கள் இழப்பதைத் தடுப்பதிலும் துறையூர் போலீஸார் மெத்தனமாகவேதான் இருக்கிறார்கள். காக்கியின் கம்பீரத்திற்கே இழுக்கு இது.

கடைசியில் இப்போது திருச்சி கலெக்டராகப் பொறுப்பேற்றிருக்கும் உஜாகர் சிங்கைப் பார்த்துப் பேச, நேரம் ஒதுக்குவதே பொது மக்கள் தொடர்புத்துறை அதிகாரிகளுக்குச் சிரமமாயிருந்தது. அத்தனை 'பிஸி.' ஆனாலும் கல்கியின் பணியைப் பற்றி நன்கு அறிந்திருந்த கலெக்டர் உஜாகர் சிங், அத்தனை கூட்டங்களுக்கும், பேட்டிக்குக் காத்திருக்கும் ஏராளமான நபர்களுக்கும் இடையே நம்மைச் சந்தித்துப் பேசச் சம்மதித்திருந்தார்.

"நீங்கள் செய்வது மிகப் பெரிய பணி. அதை நான் பாராட்டுகிறேன்!" என்று மனம் திறந்து சொன்னார் உஜாகர் சிங். காலை முதல் இரவு வரை இடைவிடாது இருக்கும் தமது பணிகளைக் குறிப்பிட்டு விட்டு, "என்னை மன்னிப்பீர்கள் என்று கருதுகிறேன். பிரச்னைகள் மிகச் சில என்றால் நான் இப்போதே கூடச் சில நிமிடங்கள் ஒதுக்க முடியும். இல்லை என்றால் நீங்கள் என்னென்ன பிரச்னைகள் என்று விளக்கமாக எழுதி எனக்குக் கடிதம் மூலம் கிடைக்கச் செய்தாலும் நான் அவற்றை விசாரித்து அவற்றுக்கு விளக்கமோ, விடைகளோ அனுப்ப முடியும்!" என்றார்.

அத்தனை அலுவல்களுக்கிடையே மூழ்கியிருக்கும் கலெக்டரை அதிக நேரம் எடுத்துக் கொண்டு சோதனைக்கு உள்ளாக்கவோ, குறைந்த பிரச்னைகளை மட்டுமே விவாதித்து, ஏராளமான வாசகர்களை ஏமாற்றத்துக்கு உள்ளாக்கவோ நாமும் விரும்பவில்லை. எனவே "நீங்கள் குறிப்பிட்டபடி நாங்கள் குறிப்பிட்ட பிரச்னைகளை எழுதி அனுப்புகிறோம். நீங்கள் கவனித்து ஆவன செய்யுங்கள்!" என்றோம்.

"ஐ வில் டேக் கேர்; அனுப்பி வையுங்கள். நமது இருவர் நோக்கமுமே மக்களுக்குச் சேவை செய்ய வேண்டும் என்பதுதான் இல்லையா?" என்றார் உஜாகர் சிங்.

நிச்சயம் செய்வார் என்ற நம்பிக்கையோடு நாமும் விடைபெற்றுக் கொண்டு வந்து, பிரச்னைகளை அனுப்பி வைத்திருக்கிறோம்.

— சாருகேசி




# தமிழக முன்னேற்றத் தொழில் மலர் 88

## சினிமா வீடியோ ஆடியோ

திரை உலகின் தலைவலிகள் பற்றி ஜி.வி.—பாரதிராஜா உரையாடல் தொடங்கி, வீடியோ, ஆடியோவில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்கள் முதல் நடக்கின்ற தகிடுதத்தங்கள் வரை!

## அழகு சாதனங்கள் தயாரிப்பு

உலகப் பிரசித்தி பெற்ற பாண்ட்ஸ் (இந்தியா) நிறுவனத் தலைவர் நாராயணனுடன் ஒரு சூடான பேட்டி தொடங்கி பியூட்டி கிளினிக் நடத்தும் பெண்மணியின் கருத்துக்கள் வரை!

## வீட்டுச் சாதனங்கள்

தரத்துக்கு ஜனாதிபதியிடம் பாராட்டுப் பத்திரம் பெற்ற ஸ்டெய்ன்லஸ் ஸ்டீல் பாத்திரம் தயாரிக்கும் நிறுவனத்துக்கு நேரடி விசிட். மற்றும் தவணை முறையில் பல வீட்டுச் சாதனங்கள் வாங்குவது பற்றிய ருசிகரமான கலந்துரையாடல்.... இன்னும் பலப்பல.

## விளம்பரத் துறை

விளம்பரங்கள் அவசியம் தானா? அவற்றால் பொருள்களின் விலை உயர்வது தான் ஆதாயமா? விளம்பரமே வியாபாரமாகிப் பல கோடி முதலீடாகியுள்ள தொழில் துறையாக வளர்ந்துவிட்ட நிலையில் பல நெருடலான கேள்விகளுக்குக் கூட அந்தத் துறை சம்பந்தப்பட்ட முக்கிய புள்ளிகள் பதில் தருகிறார்கள்!

## இயற்கைவளம்; அடிப்படைத் தேவைகள்; நிதி திரட்டல், மனித முயற்சி மேம்பாடு

தேர்தல் நிதி அல்ல! தொழில் தொடங்க நிதி திரட்டுவது எப்படி? யார் யார் உதவுவர்? பெண் தொழிலதிபர்களை உருவாக்க வென்றே வகுப்புகள் நடத்தப்படுவது தெரியுமா? தமிழகத்தின் இயற்கை வளங்கள் திறம்படப் பயன்படுத்தப்படுகின்றனவா? தொழில் வளப் பெருக்கத்தின் அடிப்படைத் தேவைகள் என்ன?

## கதைகள், நாடகங்கள், நகைச்சுவை அம்சங்கள், துணுக்குகள், வண்ணப் படங்கள்

அசோகமித்திரனின் இருபத்தோராம் நூற்றாண்டு பற்றிய கதை நெஞ்சை உருக்கும்; எஸ். ராமனின் கிரைண்டர் நாடகம் சிரிப்பில் உடலை உருட்டும்! தொழில் துறைகள் தொடர்பான ரசமான துணுக்குகள்! நகைச்சுவை கார்ட்டூனிஸ்டுகள் கிளுகிளுக்க வைத்தால் புகைப்பட நிபுணர்கள் வண்ணப் படங்களால் பிரமிக்க வைக்கிறார்கள்!

## குரூப் நிறுவனங்கள்:

டி. வி. எஸ்., சக்தி, அமால்கமேஷன்ஸ் போன்ற சில குரூப் நிறுவனங்கள் புதிய புதிய தொழில்களை ஆரம்பித்து மளமளவென்று வளர்ந்து கொண்டே போவது எப்படி? வெற்றியின் ரகசியம் என்ன? சக்தி நிறுவனத் தலைவர் என். மகாலிங்கம் விரிவான பேட்டி.

## ஜவுளி

மில் தயாரிப்புக்கள் ஒரு பக்கம் சிந்துவாரின்றிக் குவிய, கைத்தறி நெசவாளர் மறுபக்கம் வறுமையில் தொடர்ந்து உழல, ஆடை ஏற்றுமதி வியாபாரத்திலோ எக்கச்சக்க சலுகைகள்; மூட்டை மூட்டையாகப் பணம்! முரண்பாடான இந்த நிலைமைகள் பற்றி விரிவாக...

## உணவுப் பொருட்கள்; பானங்கள்

ஊறுகாய் போடவும் அப்பளம் இடவும் இன்று யாருக்கு நேரம் இருக்கிறது? கணவன் மனைவி இருவரும் வேலைக்குப் போகும் இந் நாளில் சமையல் வேலைகளை எளிதாக்கித் தருகிறது பிரும்மாண்டமாக வளர்ந்துவிட்ட உணவுத் துறை. சேமியா தயாரிப்பு முதல் ஸ்பென்சர் சோடா வரை ஓர் அலசல்!

---

**260 பக்கங்கள் :: பல வண்ணப் படங்கள். விலை ரூ. 10/—. ரிஜிஸ்தர் தபாலில் பெற ரூ. 15/—.**

---

மார்ச் 31ல் எல்லா கல்கி ஏஜெண்டுகளிடமும் கிடைக்கும். உங்கள் பிரதிக்கு உடனே பதிவு செய்து கொள்ளவும்.

---

மானேஜர், கல்கி, சென்னை—600 032.

## உங்கள் மகள் கேம்பில் கற்ற புதிய பாடம்-'உஷாராக இருங்கள்.' நீங்களும் பேன்களை எதிர்க்க உஷாராக இருக்கிறீர்களா?

# பேன் பிரச்சினையை பாதுகாப்பாகவும், நிச்சயமாகவும் தீர்த்திடுங்கள். தேர்ந்தெடுங்கள் மெடிக்கர்.

மெடிக்கர்— நன்கு ஆராய்ச்சி செய்து தயாரிக்கப்பட்ட பேன்-கொல்லி மருந்தாகும். இது உங்கள் மகளின் கேசத்தை மென்மையாக பாதுகாக்கிறது. மெடிக்கர் ஆற்றல் மிக்கது. பாதுகாப்பானது. பேன்களையும், ஈருகளையும் முற்றிலும் ஒழிக்கிறது.

**6 நிமிடங்களில், ஆரோக்கியமான, சுத்தமான பேன்கள் அற்ற கேசம்.**

மெடிக்கர், ஷாம்புவைப் போன்றதால் உபயோகிப்பது எளிது.

1. உங்கள் குழந்தையின் கேசத்தை நீரில் அலசுங்கள். 1/2 பேக்கட் அல்லது மூடி நிறைய மெடிக்கரை கேசத்தில் ஊற்றுங்கள்.
2. மெடிக்கரை, தலையில் 3 நிமிடங்களுக்கு நன்கு நுரை வரும் வரை தேய்க்கவும்.
3. கேசத்தை அலசியபின் மீண்டும் அதே போன்று (குறிப்பு 1 மற்றும் 2) மேலுமுள்ள 1/2 பேக்கட் அல்லது மூடி நிறைய மெடிக்கரை உபயோகிக்கவும்.

மெடிக்கர் பேன்களையும் ஈருகளையும் ஒழிப்பதோடு மட்டுமின்றி உங்கள் கேசத்தை ஆரோக்கியமாகவும் சுத்தமாகவும் திகழச் செய்கிறது.

# மெடிக்கர்

பேன்களிலிருந்து உங்களைக் காக்கும் பாதுகாவலன்.

எளிதானது. பாதுகாப்பானது. ஆற்றல் மிக்கது.






everest/87/RHL/549 tm

வழங்குவோர்: ரிசர்ட்ஸன் ஹிந்துஸ்தான் லிமிடெட்—விக்ஸ் மற்றும் கிளியரஸில் தயாரிப்போர்.

# வேரில்லாத மரங்கள்

"ஹலோ."

யாரோ யாரையோ கூப்பிடுகிறார்கள் என்கிற எண்ணத்தில் அழைப்பு காதில் விழுந்தும், விழாத மாதிரி அமர்ந்திருந்த மகாதேவன், மீண்டும் அதே குரல் "ஹலோ அங்கிள், குட் மார்னிங்!" என்று சொல்லவே நிமிர்ந்தார்.

புல்வெளி கூடை நாற்காலியில் உட்கார்ந்து பேப்பர் படிப்பவரைக் காம்பவுண்டுச் சுவருக்கு மேலாக எட்டிப் பார்த்துக் கொண்டு கூப்பிட்டவன் ராஜா! அடுத்த விட்டுப் பையன்...

கண்களில் ஏதோ ஓர் ஆர்வம் பளபளவென்று மின்ன, தம்மோடு பேசும் ஆசையில் 'ஹலோ' சொன்னவனை ஏறிடுகையில், சில நாட்களுக்கு முன் நடந்த நிகழ்ச்சி ஒன்று நினைவுக்கு வந்தது.

'வாக்' போக வழக்கம் போலக் கிளம்பி, அடுத்த தெரு மைதானத்தைத் தாண்டிய போது பத்துப் பதினைந்து பையன்கள் அங்கு ஒன்று கூடிக் கிரிக்கெட் விளையாடிக் கொண்டிருந்தது கண்களில் விழ, நின்றார்.

எல்லாம் சரியான பொடிசுகள், நண்டும் சிண்டுமாய்... பெரியவனாய் இருந்த பையனுக்கே மிஞ்சிப் போனால் பதினைந்து, பதினாறு வயசிருந்தால் அதிகம்..

வேடிக்கை பார்த்துக் கொண்டே நின்ற நிமிஷத்தில் பாட்ஸ்மன் அடித்த பந்து சர்ரென்று இவரை நோக்கி வர, ஒருவிதக் குஷியுடன் அதைத் தடுத்துப் பௌலரிடம் மகாதேவன் வீச, நிச்சயமாய்ப் பவுண்டரியைத் தொட்டுவிடும், நாலு ரன்கள் கணக்கில் ஏறும் என்கிற எதிர்பார்ப்புடன் ஓடாமல் நின்றிருந்த பாட்ஸ்மென் பெரிசாய் ஆட்சேபித்துக் கத்தினான்.

"யார் ஸார் நீங்க? ஓரமா நிக்காம ஏன் குறுக்கே பூந்து எதையோ செஞ்சு எங்க ஆட்டத்தைக் கெடுக்கறீங்க?"

அந்தக் கோபமும், கத்தலும் ரசிக்கும்படி இருக்கவே, வேண்டுமென்றே மகாதேவன் அவனைச் சீண்டினார்.

"நான் என்னப்பா செஞ்சேன்? ஓரமாத்தான் நின்னுக்கிட்டு இருந்தேன்.. பந்து என்னைப் பார்த்து வந்து 'என்னைப்பிடி'ன்னு கேட்டுது... பிடிச்சுப் போட்டேன்.. தப்பா?"

பாட்ஸ்மென் அவரை லட்சியம் பண்ணாமல் பந்து வீசினவனிடம் வந்தான்.

"பவுண்டரி போயிருக்க வேண்டிய 'பால்'.. அநியாயமா அவர் தடுத்திட்டார்.. நாலு ரன்களைச் சேர்க்கிறதுதான் சரி..."

"அதெப்படி? நாங்க ஒத்துக்க மாட்டோம்.. அத்தனை வேகமாப் பந்து போன மாதிரி எனக்குத் தோணல..."

விளையாட்டுக்காகத் தாம் செய்யப் போனது வம்பில் முடிந்திருப்பதை உணர முடிய, மகாதேவன் அவசரமாய் அருகில் சென்றார்.

"ஹலோ... ஹலோ... எதுக்காக ஒண்ணும் இல்லாததுக்குச் சண்டை போட்டுக்கிறீங்க? நான் ஏதோ தமாஷுக்கு...."

அவரை முடிக்க விடாமல் இரண்டாவது பாட்ஸ்மென் கத்தினான்.

"உங்க தமாஷுக்கு நாங்கதான் அகப்பட்டோமா? இந்தப் பெரியவங்க சமாசாரமே இப்படித்தான்... வலிய வந்து எல்லாத்துலேயும் தலையை விட்டுத் தகராறு உண்டாக்கிட்டு, கடைசியில் எல்லாம் இந்தப் பசங்களால—'னு கரிச்சுக் கொட்டுவாங்க.. வேலையைப் பாத்துக்கிட்டுப் போங்க.. யார் கூப்பிட்டா உங்களை இங்கே?"

பேசியவன் பக்கம் திரும்பிய மகாதேவன் புருவங்களை உயர்த்தினார்.

ராஜா. அவர் பக்கத்து விட்டுப் பையன்..

அந்த வீட்டுக்குக் குடிவந்த நாளாய் அவர் இரண்டு, மூன்று தரம் வலியப் புன்னகை புரிந்தும், அதைக் கண்டும், காணாமல் போனவன்..

"நீ ராஜா... தானே! நான் யாரு தெரியல? ஐம் ஸாரி... நான் வந்து..."

"உங்க ஸாரியை நீங்களே வச்சுக்கிட்டு, இடத்தைக் காலி பண்றீங்களா? இருட்டிக்கிட்டு வருது, இன்னும் கேம் முடியலியேனு நாங்களே கவலையோட இருக்கோம்... இவர் என்னடான்னு..."

அதற்கு மேல் அங்கு நிற்பது அநாகரிகம் என்று மகாதேவன் நகர்ந்த போது ஒருவன் ராஜாவை "உனக்கு அவரைத் தெரியுமாடா, பேர் சொல்லிக் கூப்பிடுறாரே?" என்றதும், "அவரைத் தெரிஞ்சா என்ன, தெரியாட்டி என்ன? வேண்டாததைப் பேசி நேரத்த வேஸ்ட் பண்ணாம, விளையாட வாங்கடா" என்று எரிச்சலுடன் ராஜா பதில் கூறியதும் கேட்டது.

இந்தச் சின்ன வயசில் என்ன பொறுமையின்மை, என்ன கோபம்!

சாதாரண விஷயத்துக்குக் கூடப் புலியும்,

—சிவசங்கரி—

கரடியுமாய் 'ளொர்' என்று உறுமிக் கொள்ளும் பரிமளம், தணிகாசலத்தின் பாதிப்போ இது!

அன்றைக்கு அப்படி தூக்கி எறிந்து பேசிய ராஜா இன்று கண்களும், முகமும் நட்பில் மலர "ஹலோ அங்கிள்" என்று வந்து நிற்பது வியப்பைத் தந்ததால் மகாதேவன் மௌனித்தார்.

இவர் மனத்தில் ஓடிய நிகழ்ச்சியை உணர்க்க முடிந்த மாதிரி ராஜா குற்ற உணர்வோடு கண்களைத் தழைத்து, முகத்தைப் பரிதாபமாக வைத்துக் கொண்டு பேசினான்.

"வந்து... அன்னிக்கு... நா... வந்து ஆட்ட ஜோர்ல வந்து... ஸாரி அங்கிள்..."

நினைப்பதைத் தெளிவாகச் சொல்லத் தெரியாமல் அவன் தடுமாறியது, பார்க்கப் பாவமாக இருந்ததில் 'போனால் போகிறது, அதற்காக அவஸ்தைப்படாதே' என்கிற தினுசில் மகாதேவன் புன்னகை செய்தார்.

அந்தப் புன்னகை சட்டென்று நம்பிக்கையை அதிகமாக்கி இருக்க வேண்டும்; ராஜா காம்பவுண்ட் சுவர் மேல் இன்னும் எக்கி அவரை நன்றாக எட்டிப் பார்த்தான்.

"அங்கிள், 'தேவா'ன்ற, பேர்ல ஸ்போர்ட்ஸ் ரெவ்யூ எழுதறது, நீங்கதானாமே! நிஜமா அங்கிள்?"

. . . . . . . . . .

"ப்ளீஸ் அங்கிள்.. சொல்லுங்க... அது நீங்கதானே!.... அன்னிக்கு நான் பேசினத மனசுல வச்சுக்காதீங்க... ப்ளீஸ்"

தன்னோடு பேசக் கூட அவர் மறுத்து விடுவாரோ என்கிற பயம் அந்த விழிகளில் எட்டிப் பார்ப்பதை உணர முடிய, மகாதேவன் மறுபடியும் புன்னகை செய்தார். இப்போது நம்பிக்கை அதிகமான தினுசில் எம்பிச் சுவர் மேல் உட்கார்ந்து ராஜா, இந்தப் பக்கம் குதித்து, அவரிடம் ஓடி வந்தான்.

பள்ளிக்குப் போகத் தயாராக அணிந்திருந்த யூனிஃபார்மில் சுவரின் சுண்ணாம்பு மஞ்சளாய்ப் படர்ந்திருந்தது. ஷூ நுனியில் ரோஜா பாத்தியின் சேறு..

"அடடே.... யூனிபார்ம் அழுக்காயிட்டது பாரு... கேட் வழியாக வரக் கூடாதா ராஜா!"

சொல்வது காதில் விழாத பரபரப்புடன் ராஜா அருகில் வந்து அவர் கையைப் பற்றிக் கொண்டான்.

"ப்ளீஸ் அங்கிள்... சொல்லுங்க... 'தேவா' நீங்கதானா?"

"யார் சொன்னா?"

"உங்க வீட்டுல வேலே பண்ற முத்து... சொல்லுங்க..."

தமக்கு விளம்பரம் பிடிக்காது; எழுத்தாளர் என்பதை முன்பின் தெரியாதவர்களுக்குச் சொல்லக் கூடாது என்கிற கட்டுப்பாட்டை நன்கு அறிந்திருந்த முத்து இப்படிச் செய்தது ஆச்சரியத்தை எழுப்பியதை அடக்கிக் கொண்டு "ம்" என, ராஜாவின் கண்கள் சந்தோஷத்தில் தகதகவென்று ஜொலிக்க முற்பட்டன...

"ஐயோ!.... 'தேவா' வோட கிரிக்கெட் விமர்சனம்னா எங்க எல்லார்க்கும் ரொம்ப விருப்பம் அங்கிள்... என் ப்ரண்ட்ஸ் எல்லாம் நம்பக் கூட மாட்டாங்க... இன்னிக்கு ஸ்கூலுக்குப் போய் விஷயத்தைச் சொன்னா..."

மகாதேவன் அவன் கையில் மென்மையாய்த் தட்டி 'ஷ்... ஷ்' என்று அடக்கினார்.

"நோ ராஜா... அப்படி எல்லார்கிட்டையும் சொல்லி விளம்பரம் பண்ணறது எனக்



குப் பிடிக்காது...''

''இதில் விளம்பரம் என்ன அங்கிள்? வி ஆர் ஆல் கிரேஸி அபௌட் கிரிக்கெட் அண்ட் யூ. நாங்க....''

''நோ ராஜா... எனக்குப் பிடிக்காதுனப் புறமும் நீ வற்புறுத்தறது தப்பு....''

ராஜா உதட்டை நாவால் ஒருதரம் ஈரப் படுத்திக் கொண்டான். தயக்கத்தோடு கேட்டான்:

''நா... நா மட்டுமாவது அப்பப்ப வந்து உங்க கூட கிரிக்கெட் பத்திப் பேசலாமா?''

மகாதேவன் சிரித்தார்.

''தாராளமா...''

''தாங்ஸ் அங்கிள்... வந்து... கபில்தேவ், ஸ்ரீகாந்த் எல்லாரையும் உங்களுக்குப் பர்ஸனலாத் தெரியுமா? அவங்க பக்கத்தில உட்கார்ந்துக்கிட்டுப் பேசியிருக்கீங்களா? ஐயோ! என்ன மடத்தனமா கேள்வி கேக்கறேன்...! நல்லாப் பழக்கமில்லாட்டி அத்தனை ஆர்டிகிள்ஸ் எழுத முடியுமா? அவங்களோட....''

பேசிக் கொண்டிருக்கையிலேயே வாசலில் ஸ்கூல் பஸ் வந்து நின்று, ஓசை எழுப்ப, கூடவே ''ராஜா... எங்கடா போயிட்ட? புஸ்தகப் பையும், வாட்டர் பாட்டிலும் அப்படியே கிடக்கு...'' என்று பரிமளத்தின் குரல் கேட்க, மனமில்லாமல் ராஜா காம்பவுண்ட் சுவரிடம் ஓடினான்.

''சாயங்காலம் வரட்டுமா அங்கிள், ப்ளீஸ்?'' என்று கேட்டு, அவர் தலை அசைத்ததும் எம்பிச் சுவரைத் தாண்டி அந்தப் பக்கம் குதித்தான்.

''எங்கே போயிட்டு வரே? பக்கத்து வீட்டுக்கா! அங்கே உனக்கு என்ன வேலை? யூனிஃபார்மை ஏண்டா இப்படி அழுக்காக்கிட்டே?... தினமும் உன்னோட எனக்கு ரோதனையா இல்ல போச்சு!... ஸ்கூல் பஸ் வர்ற நாழி ஆவறதேன்ற பதைப்பு, துளி இல்லாம, ஏசுவே! இந்தப் பையனை ரட்சிக்கக் கூடாதா? வெட்டியாச் சுத்தற பழக்கமெல்லாம் பரம்பரையா இல்ல வருது... ஹூம்... ஏசுவே....''

ராஜா மறைந்து அரை நிமிஷம் ஆகியும் எங்கேயோ ஆரம்பித்து, எதிலோ பரிமளம் முடிக்க, தொடர்ந்து தனிகாசலத்தின் குரல் கிண்ணென்று காதுகளில் அறைந்தது.

''யாரும் இங்கே வெட்டியாவும் சுத்தல, தண்டமாவும் இருக்கல... பொம்பளைங்கன்னா அடக்க ஒடுக்கமா இருப்பாங்கன்னு கேள்வி... எங்க! வாசல்ல நின்னு ராட்சஸியாக் கத்தறதக் கேட்டா, மத்த பொம்பளைங்க நாக்கைப் புடுங்கிப்பாங்க...''

''யாரை... யாரை ராட்சஸின்னு சொல்றீங்க? வாயை அடக்கிப் பேசினாத் தேவல...''

''மொதல்ல நீங்க அதச் செய்யுங்க... அப்புறமா மத்தவங்களுக்குப் புத்தி சொல்ல வரலாம்....''

''அடடா.... வாசல்ல நின்னுக்கிட்டு எதுக்காக ரெண்டு பேரும் கத்தறீங்க, நாங்க ஆபீஸுக்குப் பொறப்படர நேரத்துல?''



''பால் பூத்தைச் சோதனையிட வந்த அதிகாரி நடுக்கிட்டுப் போயிட்டாரா... ஏன்?''

''உள்ளே அடிகுழாய் ஒண்ணு இருந்ததாம்!''

— உ. ராஜாஜி.

''பாரு தம்பி... சும்மா ரூம்புல உட்கார்ந்துக்கிட்டு இருக்கிற என்னை, வலிய வம்புக்கு இழுத்து....''

உள்ளார போங்கப்பா... எனக்கு நாழி ஆச்சு... எப்ப, என்னத்தப் பேசறதுன்ற புத்தி இல்லாம... ஏய், வசந்தா இப்ப நீ வரப் போறியா, இல்ல, நான் கிளம்பட்டுமா?''

''எதுக்காக இந்தக் கத்துக் கத்தறீங்க மாது? வந்துக்கிட்டே இருக்கேன் இல்ல... ஆமா, இது என்ன டிபன் டப்பா....? ராஜா எடுத்துக்கிட்டுப் போகலியா? என்ன அத்தம்மா, நீங்க அவனண்டை கொடுக்கலியா?''

''ஆமா வசு — ஊருக்கு இளைச்சவ நான் தானே... எந்தத் தப்புன்னாலும் எம்மேலத் தானே சாய்ப்பீங்க?''

''இப்ப உங்களை நான் என்ன சொல்லிட்டேன்னு இப்படி ஆத்திரப்பட்டுக்கறீங்க அத்தம்மா? ஏன் டிபன் டப்பாவக் கொடுக்கலேனு கேட்டாத் தப்பா!''

''தப்பில்லே வசு... தப்பேயில்ல.... எல்லாம் எம் போறாத வேளை; எல்லார் வாயிலேயும் விழுந்து எழுந்திருக்க வேண்டியிருக்கு... ஏன்? நான்தான் கொடுக்கணுமா? நீ ஞாபகமாக் கொடுத்திருக்கலாம், இல்ல?''

குழந்தை சாப்பாட்டு டப்பாவை எடுத்துக் கொள்ளாமல் பள்ளிக்குப் போயிருக்கிறானே, மதியம் பசித்தால் என்ன செய்வான் என்கிற பதைப்பு இல்லாமல் அந்தப் பேச்சுக்கள் அமைய,

கேட்டவரை போதும் என்கிற வெறுப்பில் மகாதேவன் உள்ளே எழுந்து வந்த பிறகும் தெளிவில்லாமல் ஏதோ வார்த்தைகள் அடுத்த வீட்டிலிருந்து ரொம்ப நேரத்துக்குக் கேட்கவே செய்தன...

மத்தியானம் மகாதேவன் சாப்பிட உட்கார்ந்த போது ராஜா டிபன் டப்பாவை வைத்துவிட்டுப் போனது நினைவுக்கு வந்து, லேசாகச் சங்கடத்தில் ஆழ்த்தியது...

சின்னப் பையன்... பசித்தால் என்ன செய்வான்?

இதுநாள்வரை பார்த்துப் பழகிய வரைக்கும் ராஜா மேல் அவருக்கு அத்தனை நல்ல



"அந்த கட்சித் தலைவர் மேடையிலே பேசும் போது ஏன் அடிக்கடி கையைத் துண்டால் துடைச்சிக்கிட்டுப் பேசறாரு..."

"அதுவா... அவர் கை ரொம்பச் சுத்தம்னு ஜனங்க நம்பணுமாம்!"

— எஸ். ராகவேந்திரா.

அபிப்பிராயம் இல்லைதான்...

அதிகப்பிரசங்கி, பிஞ்சிலே வெம்பிய ரகம் என்று நினைத்தது உண்டுதான்.

ஆனால், காலையில் கண்ணகல, வெகுளித்தனம் நிறைந்த ஆர்வத்துடன் வந்து பேசியதை மனசுக்குள் நிறுத்திப் பார்த்த போது தான் நினைக்கும் அளவுக்கு அந்தக் குழந்தை அடிப்படையில் மோசமானவன் இல்லையோ என்கிற சந்தேகமும் தோன்றியது...

பெரியவர்கள், வளர்ப்பில்தான் கோளாறு?

அந்தக் கோணத்தில் யோசிக்காமல், ராஜாவின் பேச்சு, நடத்தையை மேலோட்டமாகப் பார்த்து அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வந்து விட்டேனு!

**அ**ன்று மாலை ஸ்கூலிலிருந்து திரும்பிய உடனே ராஜா அவரைக் காண வந்து விட்டான்.

கலைந்த முடி, அழுக்கு யூனிஃபார்ம், ஷு... காலையில் அவர் சொன்னது நினைவில் இருந்த மாதிரி 'கேட்' வழியாக வந்தான்.

"கிரிகெட்டியர்ஸ் போட்டோஸ் வச்சிருக்கீங்களா அங்கிள்?"

"காட்டறேன் — அதுக்கு முன்னாலே நீ இதுக்குப் பதில் சொல்லு ராஜா... காலையில டிபன் பாக்ஸை வச்சிட்டுப் போயிட்டியே, மத்தியானச் சாப்பாட்டுக்கு என்ன பண்ணினே?"

"ஹோட்டலில் சாப்பிட்டேன்..."

"பணம்?"

"மாசம் ஐம்பது ரூபா டாடி பாக்கெட் மணி தருவார் — அப்பப்ப தாத்தா, பாட்டி—கிட்டயும் சுலபமா வேண்டியதைக் கறந்திடுவேனே... அது இருக்கட்டும், போட்டோஸ் காட்டுங்க அங்கிள்..."

பத்து வயசுப் பையனுக்கு எதற்கு இத்தனை பணம்? இது பற்றி யாராவது அந்த வீட்டில் யோசிக்கிறார்களோ என்கிற சன்னமான கவலையுடன் மகாதேவன் எழுந்து, போட்டோ ஆல்பங்களை எடுத்தார்.

அடுத்து வந்த மாதங்களில் கிரிகெட்டின் பால் உள்ள மோகத்தால் முடிந்தபோதெல்லாம் ராஜா அவரைத் தேடி வர, கொஞ்சம் கொஞ்சமாய் அந்தப் பத்து வயசுப் பையனின் நிஜமான முகம், குணம் நன்றாகவே புரிபட ஆரம்பித்ததில், மகாதேவனின் கவலை அதிகமாகத் தொடங்கியது.

இது விஷயமாய்த் தம்மால் ஏதேனும் செய்ய முடியுமா, பக்குவமாய் ராஜாவிடம் பேசி அவனை வழிக்குக் கொண்டு வரும் அதே சமயத்தில் வேறு ஏதாவது நினுசில் அவனை அணுகுவது இயலுமா என்கிற யோசனை எழுந்த ஒரு நாளில் பத்திரிகை அலுவலகம் ஒன்றுக்குச் சென்றுவிட்டுக் காரை ஓட்டிக் கொண்டு வீடு திரும்பின போது, ட்ராஃபிக் ஸிக்னலில் கொஞ்சம் நிதானித்தவர், பிளாட்பாரத்தில், அந்தத் தியேட்டருக்குச் செல்லும் வழியில், இரண்டு பசங்களோடு நின்றிருந்த ராஜாவை எதேச்சையாகப் பார்த்தார். அதிர்ந்தார்.

ராஜாவா?

எஸ்... ராஜாவேதான்..

கையில் புகையும் சிகரெட்டுடன்..

பத்து வயசுப் பிள்ளை, பள்ளிக் கூடத்துக்கு மட்டம் அடித்து விட்டு, சினிமாத் தியேட்டர் வாசலில், அதுவும் கையில் சிகரெட்டுடன்...

என்ன அக்கிரமம் இது!

கூட நிற்கும் பையன்களைப் பார்த்தால் வடிகட்டின தத்தாரிகளாகத் தெரிகிறார்களே, இவர்கள் ராஜாவின் நண்பர்களா?

தடிதடியாய், ராஜாவைவிட நாலைந்து வயசு பெரியவர்களாய்... இந்தச் சகவாசம் சரியானது தானா?

ம்ஹூம்... எதுவுமே சரியாக இருக்கிற மாதிரி தோன்றவில்லையே..

நவக்கிரகங்கள் மாதிரி அந்த வீட்டில் திசைக்கு ஒன்றாக வக்கரித்துக் கொண்டு நிற்கும் பெரியவர்கள் தெரிந்தோ தெரியாமலோ தங்கள் நடத்தையால், இந்த சின்னப் பிள்ளை அடிவாங்குகிறான் என்று புரிந்து கொள்ள மறுப்பது எத்தனை துர்ப்பாக்கியமான சமாசாரம்...

இதற்கு என்ன செய்யலாம்!

மாதவனிடம் தனியாய்ப் பேசிப் பார்க்கலாமா?

தணிகாசலம், பரிமளம் இருவரையும் தனித்துச் சந்தித்து நிலைமையை விளக்கலாமா?

'நீ யாரடா எங்கள் விஷயத்தில் தலையிட?' — என்று கேட்டாலும் பரவாயில்லை என்று முனைந்து விடலாமா?

அடுத்து வந்த வாரங்களில் புரட்டிப் புரட்டிச் சிந்தித்து, தம் சுபாவத்தை மீறின காரியத்தைச் செய்ய ஒரு வழியாய் மகாதேவன் தயாரான போதுதான், யாரும் அறியாமல் ராஜாவினுள் புகுந்து, எவர் கண்ணிலும் படாமல் திறமையுடன் கண்ணாமூச்சி ஆடிவிட்டு, முற்றின நிலையில் நன்றாக வேர்விட்டுக் கொண்ட மஞ்சள் காமாலை வியாதியின் சொரூபம் வெளியில் தெரிய வந்தது!

(தொடரும்)

# கோகுலம்

## தம்பி தங்கைகளுக்குப் பரீட்சையில் வெற்றி பெற வாழ்த்துக்கள்!

பரீட்சை முடித்த கையோடு படிக்க இப்போதே வாங்கி வைத்துக் கொள்ளுங்கள் : கோகுலம் ஏப்ரல் இதழ்.



அப்பு + சுப்பு
—சிரிப்புக் கதை



சிப் சாப்!
— அட்டைப்படக் கட்டுரை



பொல்லாத அரசனுக்குப் பூச்சி அளித்த தண்டனை!
— பிரெஞ்சுக் கதை

- கோகுலம் தம்பி தங்கைகள் எழுதிய பிருந்தாவனப் பக்கங்கள்
- என் குழந்தைப் பருவம் • விசித்திரச் செய்திகள் • மின்மினிக் கதைகள்



# பொறுப்பு

கடிகாரம் பன்னிரண்டு முறை அடித்து ஓய்ந்ததும் ஞானம்மா படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள். தம்பி இன்னும் வீடு திரும்பாதது அவளுள் எரிச்சலைக் கிளர்த்தியது. 'என்ன ஆண் பிள்ளைகள்! நினைத்த நேரத்துக்கு வெளியே போவது. நினைத்த நேரத்துக்குத் திரும்பி வருவது. வீட்டில் உள்ள பெண்டுகள் கவலைப் படுவார்களே என்ற சிந்தனையே கடுகளவும் இல்லாதவர்கள். கவலை தெரிவித்தால், 'நான் என்ன குழந்தையா?' என்ற ஒரே கேள்வியின் மூலம் பெண்களை அசட்டை செய்கிறவர்கள். அவர்கள் குழந்தைகளாக இல்லாமல் போகலாம். ஆனால் வீட்டில் அவர்களுக்கென்று பொறுப்புகள் இல்லையா? குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளுவது என்பதைப் பெண்கள் மட்டும்தான் செய்ய வேண்டுமா? குழந்தை என்பதே பெண்கள் சம்பந்தப்பட்டதுதானா?

சொந்தத் தமக்கை தானென்றாலும், தம்பியின் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளக் கடமைப்பட்டவள் தானென்றாலும், அதற்கென்று ஒரு வரையறை கிடையாதா? பதினைந்து வயதில் கைம்பெண்ணாகிப் பிறந்த வீடே கதியென்று திரும்பி வந்து அந்தக் குடும்பத்தில் இணைந்து கொண்ட நாளிலிருந்து அவள் கூப்பிட்ட குரல்களுக்கும், கூப்பிடாத குரல்களுக்கும் பணிபுரியும் ஒரு வேலைக்காரியாகவே இருந்து கொண்டிருந்தாள்.

கணவனை இழந்து திரும்பிவிட்ட தன்னை யாரும் ஒரு சுமையாகக் கருதிவிடக் கூடாது என்ற எண்ணத்தால் தன் உடல் திறனுக்கு அப்பாலும் அவள் உழைத்து வந்திருந்தாள். ஐம்பத்தைந்து வயதுக்குப் பிறகும் அன்று மாதிரியே இன்றும் உழைக்க வேண்டும் என்று எல்லோரும் எதிர்பார்த்ததாய் அவளுக்குத் தோன்றியது. தம்பியின் மனைவி சரசு உயிரோடு இருந்த வரையில் அவளுக்குக் குற்றேவல் செய்தாயிற்று. இப்போது மனைவியை இழந்துவிட்ட தம்பிக்குக்



குற்றேவல் செய்தாக வேண்டி இருந்தது.

இரண்டு நிமிடங்கள் போல் உட்கார்ந்திருந்த ஞானம்மா எழுந்து பாத்ரூமுக்குப் போய்விட்டு வந்து திரும்பவும் படுத்துக் கொண்டாள். படுத்த ஒரு நிமிடத்துக்கெல்லாம், தெருப் பார்த்த ஜன்னல் பக்கத்திலிருந்து, ரகோத்தமனின் குரல், ''அக்கா, அக்கா'' என்று மெதுவாய் ஒலித்தது.

'இவ்வளவு மெதுவாய்க் கூப்பிடுகிறானே, நான் தூங்காமல் இவனுக்காக விழித்துக் கொண்டிருப்பேன் என்பது தெரிவதால் தானே இவ்வளவு மெதுவாய்க் கூப்பிடுகிறான். ஆக, அக்காவின் தூக்கத்தைக் கெடுக்கிறோம் என்பது தெரிந்துதானே இவன் இவ்வளவு தாமதமாய் வீட்டுக்கு வருகிறான். இரவு பன்னிரண்டு மணி வரையில் வெளியே என்ன வேலை? சினிமாவா, இல்லாவிட்டால் சிநேகிதர்களுடன் வம்பும் அரட்டையுமா? சரசு இருக்கும் போது ஒன்பதுக்கெல்லாம் வந்து முடங்கத் தெரியவில்லை? ஏன்? ஏழுக்குள் பெரும்பாலும் வந்து விடுவானே. எப்போதாவதுதான் எட்டரை ஒன்பது என்று வருவான். அதற்குக் கூட சரசு சத்தம் போடுவாளே....'

மனசுக்குள் இத்தனை எண்ணங்களுக்கும் ஒரே நொடிக்குள் ஆட்பட்ட ஞானம்மா, ''இதோ வாரேன்,'' என்று பதில் சொல்லிவிட்டு எழுந்து போய்க் கதவைத் திறந்தாள்.

ரகோத்தமன் உள்ளே நுழைந்து கதவைச் சாத்தித் தாளிட்டு விட்டுப் பாத்ரூம் நோக்கி நடந்தான். 'இன்று இரண்டிலொன்று கேட்டு விட வேண்டும்' என்று அவளுக்குத் தோன்றியது. காலையில் பார்த்துக் கொள்ளலாமென்றால், அதற்கு வாய்ப்பே கிடைப்பதில்லை. எட்டரைக்கெல்லாம் படி இறங்கி விடுகிறான். இரவில் ஒரு நாள் போல் பெரும்பாலும் பதினொரு மணிக்கு முன்னால் வருவதே இல்லை. சரசு செத்துப் போனதிலிருந்து இப்படி ஒரு பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டு விட்டான். இரவு நேரத்தில் வீடு திரும்பியதும் திரும்பாததுமாய்ப் பேச வேண்டாமென்றால் பிறகு எப்போதுதான் பேசுவது? ஞாயிற்றுக் கிழமைகளிலும் காலில் கஞ்சியைக் கொட்டிக் கொண்டு மற்ற நாட்களை விடவும் இன்னும் முன்னதாய்ப் புறப்பட்டுப் போய் விடுவான்....'

ஐம்பது வயது தாண்டிவிட்ட நிலையில் அவனது தாமத வருகைக்கு அசிங்கமான வேறு ஏதேனும் காரணம் இருக்குமோ என்ற நினைப்பு, அவளுள் திடீரென்று ஏற்பட்டபோது, அவள் முகம் சுருங்கியது. 'அப்படி எல்லாம் இருக்காது' என்று சமாதானப்படுத்திக் கொண்டாள். அவளுக்குத் தெரிந்த வரையில் ரகோத்தமன் அப்படியெல்லாம் நடந்து கொள்ளக் கூடியவனல்லன். 'சரசு, சரசு' என்று உயிராய் இருந்தவன். ஆனாலும் இந்த ஆண் பிள்ளைகளை நம்பக் கூடாது. பெண்ணுறவு என்று வரும் போது மட்டும் உடல் வேறு, மனம் வேறு என்று சாமர்த்தியங்காட்டுகிறவர்கள். 'உடம்புக்காக நான் வெளியே போனாலும் என் மனம் முழுக்க நிலைத்திருப்பது நீதான்' என்று அறிவித்து இறந்து போன மனைவியிடம் மானசீகமன்னிப்புக்கேட்கிற சந்தர்ப்பவாதிகள். இந்த விதியைப் பெண்ணுக்கு மட்டும் பொருத்த மறுக்கிற ஓரவஞ்சனைக்காரர்கள்...

இந்த இரவு நேரத்தில் அவளுக்கு இப்படிப்பட்ட சிந்தனைகள் வந்ததற்குக் காரணமே அவள் அப்பாவின் சிறு வயதுச் செய்கைதான். அவள் அம்மா கொஞ்ச நாட்கள் படுக்கையில் இருக்க நேர்ந்தபோது, எவளுடனோ தகாத உறவு வைத்துக் கொண்டு அவளுக்குத் தெரியவந்து கேட்டு அழுத போது இப்படித்தான் அவர் அவளுக்குச் சமாதானம் சொன்னார்...

பாத்ரூமிலிருந்து திரும்பிய ரகோத்தமன் அவளைத் தாண்டிக் கொண்டு தன்னறைக்குச் செல்லப் பார்த்த கணத்தில், ஞானம்மா அவனைப் பிடித்துக் கொண்டாள்.

''ரகு... உன்னோட கொஞ்சம் பேசணும். இப்படி வா. வந்து உட்காரு...''

''என்னக்கா இது? இந்த நேரத்துலே என்ன பேசப் போறே? எனக்குத் தூக்கம் கண்ணைச் சுத்துது. காலையில் பேசேன். அம்புட்டு அவசரமான விஷயமா, இப்பவே பேசற அளவுக்கு?''

ஞானம்மாவுக்கு ஆத்திரம் வந்துவிட்டது.

''ஆமாண்டா, பன்னிரண்டு மணி வரையில ஊரைச் சுத்தி ஊளை இட்டுட்டு வருவே. வீட்டுக்குள்ளே அடி எடுத்து வச்சதுமே உனக்குத் தூக்கம் கண்ணைச் சுத்தும். எனக்கெல்லாம் தூக்கம் கிக்கம் எதுவுமே கிடையாதில்லே?''

ஞானம்மா அவனிடம் கடுமையாகப்பேசியதே இல்லை. இதனால் ரகோத்தமன் வெளிப்படையாய் அதிர்ந்து போனான். அவன் கண்கள் அகலங்கொண்டது விடிவிளக்கின் மங்கிய வெளிச்சத்திலும் ஞானம்மாவுக்குத் தெரிந்தது. அவளும் இமைக்காது கடுமை தெறித்த விழிகளால் அவனை உறுத்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

இரண்டு விநாடிகளுக்கு மேல் அக்காவின் பார்வையைத் தாங்க முடியாது போய் அவன் தலையைத் தாழ்த்தினான்.

''சரி, சொல்லுக்கா... என்ன பேசணும்?''

''முதல்ல இப்படி உக்காரு.''

அவன் உட்கார்ந்தான்.

ஞானம்மா தொண்டையைச் சரி செய்து கொண்டாள்: ''ஏன் இப்பல்லாம் இப்படிப் பதினொண்ணு, பன்னிரண்டுன்னு வந்து என் கழுத்தையறுக்குறே?''

ரகோத்தமன் இரண்டாவது தடவையாய் அதிர்ந்தான். ஞானம்மா இப்படியெல்லாம் பேசியதே கிடையாது.

'உனக்குத் தொந்தரவுன்னா இனிமேல் நான் காலாகாலத்துல வீட்டுக்கு வந்துடறேங்கா. நாளையிலேர்ந்து பாரு...' என்ற

ஜோதிர்லதா கிரிஜா

பதிலை எதிர்பார்த்த அவள் ஏமாந்துதான் போனாள்.

"ஆம்பிளைன்னு வெளியிலே ஆயிரம் பழக்க வழக்கம் இருக்கும். பேச்சு வார்த்தை இருக்கும். நீ சந்தேகப்படற மாதிரி நான் ஒண்ணும் தகாத காரியம் எதுவும் செய்யல்லே..."

தனது ஊகத்தைத் தம்பி கண்டுபிடித்து விட்டதில் சிறிது வியப்பு விளைந்தாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல், "பின்ன எதுக்கு இப்படிப் பதினொண்ணு பன்னிரண்டுன்னு லேட்டா வர்றே? சரசு இருந்தப்ப ஏழு மணிக்குள்ளாற வந்திட்டிருந்தியே?" என்று மடக்கினாள்.

அவன் அக்காவை ஏறிட்டுப் பாராது, "அவ இருந்தப்ப வீட்டில் எனக்குப் பிடிமானம் இருந்திச்சு. இப்ப ஏண்டா வீட்டுக்கு வர்றோம்னு இருக்குது... மனசு தாங்கலே..." என்றான். குரல் தடுமாறியது.

ஆனால் ஞானம்மா நிறுத்தத் தயாராக இல்லை.

"என்னது? ஏண்டா வீட்டுக்கு வர்றோம்னு இருக்குதா?... பத்து வயசுக் கண்ணனை விடு. அடுத்தாப்பல இருக்கிற ஏழு வயசு பாலு, ரெண்டு வயசு மீனு... இதுங்களோட விளையாடிப் பொழுது போக்கணும்னு உனக்குத் தோணலே? ரெண்டுங்கெட்டான் வயசுல தாயைப் பறிகொடுத்துட்டு நை நைன்னு அழுதுக்கிட்டுக் கிடக்கிற பசங்களுக்கு ஆறுதலா ஏதாச்சும் பேசுவோம். வேடிக்கை காட்டுவோம், அதுங்களை எங்கிட்டாச்சும் பார்க், பீச்சுன்னு கூட்டிக்கிட்டுப் போய் அம்மா நினைப்பைக் கொஞ்சமாச்சும் மறக்கடிப்போம்னு தோணலே. வெளியே சுத்திட்டு வர்றானாம், வெளியே. ஏண்டாப்பா வீட்டுக்கு வர்றோம்னு இருக்குதாம். ஏண்டா? உன்னை ஒரு கேள்வி கேக்கட்டுமாடா?"

"......"

"இப்ப நிலைமை வேறே மாதிரி ஆயிருந்திச்சுன்னு வெச்சுக்க. நீ போயி, சரசு இருந்திச்சுன்னு வெச்சுப்போம். அது இப்படித்தான் தன் கவலையை மறக்க ஊர் சுத்துமா? புருஷன் இல்லாத வீடு என்ன வீடுன்னு சொல்லிக்கிட்டு ராவில் வந்து கதவு தட்டுமா? சரி, இம்புட்டு நேரம் வெளியில் நீ என்ன செய்யறே? சொல்லு."

"சிநேகிதங்களோடு சீட்டாடுவேங்க்கா. வேறே ஒண்ணும் தப்பிதமான காரியம் இல்லே."

"சரி. இன்னைக்குச் சீட்டாடுவே. நாளைக்குக் குடிச்சுட்டு ஆடச் சொல்லித் தருவானுக. அதுக்குப் பெறகு குட்டியோட ஆடச் சொல்லித் தருவானுக. ஏண்டா! கொழந்தைங்களைப் பெத்துப் போட்டுட்டா ஆச்சா? ஒரு தகப்பனுடைய கடமையை ஒழுங்காச் செய்யணும்டா. அவங்களுக்கு ஆறுதல் சொல்லுவியா...? வெளியே சுத்தினானாம் வெளியே! எனக்கு எம்புட்டு வயசாகுது தெரியுமில்லே? உன்னை விட அஞ்சு வயசு பெரியவ நான். பதினஞ்சு வயசுல அறுத்துப் போட்டு அப்பன் வீடே கதின்னு வந்து சேர்ந்தேன். வந்த நாள்லேருந்து இங்க எனக்கு வேலைக்காரி உத்தியோகந்தான். நம்மை ஒரு பளுவா யாரும் நினைச்சுடக் கூடாதுங்கிறதால நாயா அலைஞ்சு மாடா உழைச்சுக்கிட்டிருக்கேன். என் கடைசி காலத்திலே வீட்டு வேலையிலேருந்துதான் ஓய்வு இல்லேன்னு, ரெண்டுங்கெட்டான் பசங்களைக் கட்டி மேய்க்கிற வேலையை வேறே நான் செய்துக்கிட்டிருக்கணுமாடா? உனக்குன்னு எந்தக் கடமையும் இல்லையா? இனிமேல் ஏழு, ஏழரைக்குள்ளாற இருக்கணும். இல்லாட்டி நான் முதியோர் இல்லத்துல போய்ச் சேர்ந்துடுவேன். அப்புறம் உன் பாடு, உன் பிள்ளைங்க பாடு. இது வெறும் வார்த்தை இல்லே. சத்தியம்!" என்று அது நள்ளிரவைத் தாண்டிக் கொண்டிருந்த அமைதி நேரம் என்பதை அறவே மறந்து கத்திவிட்டுப் படுத்தாள் ஞானம்மா.

அக்கா குரலை உயர்த்திக் கேட்டிராத ரகோத்தமன் திகைப்புடன் சில நொடிகள் நின்றுவிட்டுத் தளர்ந்த நடையில் தன்னறை நோக்கி நடந்தான்.

## அடுத்த இதழில்...



**கு. க. ஆபரேஷனுக்குப் பலியான பெண்மணி!**

— அரசு மருத்துவமனையில் நடந்த அநியாயத்தைப் பற்றிய நேரடி ரிப்போர்ட்

அலங்கார் A/c
வசந்தி A/c
பகல் காட்சி

அனு சுகா A/c -
தினசரி 4 காட்சிகள்

கிருஷ்ணவேணி
பாரத்
3 காட்சிகள்
மற்றும் தமிழகமெங்கும்

ாலசந்தர்

வழங்கும்



# பெண்மணி அவள் கண்மணி

விசு

N. பாலகிருஷ்ணன் சங்கர்-கணேஷ் கவிஞர் வாலி கணேஷ்-குமார்

GANT

# உணவு உட்கொள்வதற்குமுன் மந்திரம் சொல்லி சாப்பிடுவதால் உண்டாகும் பலன்

சாஸ்திரத்தில் சொல்லியபடி மற்ற அனுஷ்டானங்களுடன் பகல் உணவிற்கு முன் சொல்ல வேண்டிய மந்திரம்.

''ஓம் ப்ராணாய ஸ்வாஹா, ஓம் அபாநாய ஸ்வாஹா,
ஓம் வ்யாநாய ஸ்வாஹா, ஓம் உதாநாய ஸ்வாஹா,
ஓம் ஸமாநாய ஸ்வாஹா, ஓம் ப்ரம்மணே ஸ்வாஹா,
ப்ரஹ்மணிம ஆத்மா அம்ருதத்வாயா''

பலன்:- துன்மார்க்க விருத்தியில் திரவியம் சம்பாதிக்க இடங் கொடாமல் நியாயமாய் சம்பாதிக்க எண்ணமுண்டாகும். அப்படி நியாயமாய் சம்பாதிக்க திரவ்வியத்தினால் பதார்த்தங்களை வாங்கி சமைத்து பகவானுக்கு ஆராதித்து அந்த சேஷத்தை நான் சாப்பிடுகிறேன் என்றும், நான் சாப்பிடும் ஆகாரம் அநியாயமாய்ச் சம்பாதித்தல்ல, நியாயமாய்ச் சம்பாதித்ததென்று திட வைராக்கியம் ஏற்படும்.

ஆகையால் அன்னத்தை மந்திர பூர்வமாய்ச் சுத்தி செய்து பிறகு அன்னத்தைச் சாப்பிட வேண்டும்.



* 'உல்டா'ப்பேச்சு!



* 'நான் இடி அமீன்தான்!'



* பதவி இறக்க பந்த்?



ஆளுனரிடம் மனு



* "சிவாஜியைத் தெரியாது!"

# 'பந்த்' நடத்தியது முறைதானா?

* க. இளங்கோ, நந்தியநல்லூர்.

? என் வோட்டும் 'ஜ'வுக்குத்தான். நீங்கள் எந்த 'ஜ'வைச் சொல்கிறீர்கள்?

! நான் ஜனதாவை நினைத்துக் கொண்டு சொல்லவில்லை. நீங்கள் ஜனநாயகத்தை மறந்து விடுவீர்கள் என்றும் நான் நினைக்க வில்லை!

* இந்துமதி பாலன், பேரூர்.*

? ராஜீவ் அரசை ராஜினாமா செய்யக் கோரி எதிர்க்கட்சி 'பாரத் பந்த்' நடத்தி விரயமாக்குவது முறைதானா?

! ராஜீவின் பல நடவடிக்கைகளை நான் மிகக் கடுமையாக எதிர்க்கிறேன் என்றாலும் இந்த 'பந்த்' விஷயத்தில் எனக்கு உடன்பாடில்லை. காரணம் இதுமாதிரியான 'பந்த்'களெல்லாம் ராஜீவைப் பதவியிலிருந்து தூக்கியெறிந்து விடாது. உண்மையில் தூக்கியெறியும் சக்தி படைத்தவர்கள் மக்கள்; அதாவது தேர்தலில் அவர்கள் போடும் வாக்குகள். இந்நிலையில் எதிர்க்கட்சிகள் ராஜீவ் அரசின் ஏமாற்று வேலைகளையும் இயலாமையையும் மக்களிடம் பிரசாரம் செய்து எடுத்துச் சொல்லி வரப்போகும் தேர்தலில் ராஜீவுக்கு எதிராக வாக்களிக்கத் தயார் செய்வதுதான் நியாயமானது. அதைத்தான் நான் ஆதரிக்கிறேன். பந்தினால் பாதிக்கப்படுகிற லட்சக்கணக்கான மக்கள் எதிர்க்கட்சிகளை வெறுக்க ஆரம்பிக்கிற நிலைமை தோன்றக் கூடும் என்பதையும் பந்த் நடத்துபவர்கள் எண்ணிப் பார்க்க வேண்டும். கதவடைப்புச் செய்பவர்களில் பலர் பந்துக்கு ஆதரவு தெரிவிப்பவராய் இல்லாவிட்டாலும் வன்முறைகளுக்குப் பயந்து 'எதற்கு வம்பு' என்று எண்ணியே மூடுகிறார்கள். கூட்டிக் கழித்துப் பார்த்தால் உற்பத்தியும், வாணிபமும் பாதிக்கப்பட்டு அந்த அளவுக்கு நாட்டின் பொருளாதாரம் பாழாவதே மிச்சமாயிருக்கும்.

* மு. மதிவாணன், அரூர்.

? முதல்வர் பதவிக்காகத் தாம் என்றுமே அலைந்ததில்லை என்று கூறுகிறாரே நெடுஞ்செழியன்?

! எம். ஜி. ஆரின் மறைவுக்குப் பிறகு அந்த வாய்ப்புத் தமக்குத்தான் என்று மலையாக நம்பிப் பரபரப்பாகத் தாம் விட்ட அறிக்கைகளின் மை உலருவதற்குள்ளாகவா உல்டாவாக இப்படிப் பேசுகிறார்; ஆச்சரியம்தான்!

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? 'நான் இடி அமீன்தான். நிறையப் பேரை

ஒருவழி செய்துவிட்டேன். யாரும் என்னிட மிருந்து தப்ப முடியாது. தொடர்ந்து நான் இடி அமீனகச் செயல்பட உங்கள் ஆதரவு தேவை!' என்று பி. ஹெச். பாண்டியன் பேசியுள்ளாரே?

! இது அவர் தமது தொகுதியான சேரன் மாதேவி மக்களிடம் பேசிய பேச்சு. அநேக மாகத் தம் தொகுதி மக்களிடம் தம்மைப் பற்றிய உண்மைகளைச் சொல்லி வோட் டுக் கேட்கும் முதல் வேட்பாளர் பாண்டிய னகத்தான் இருப்பார் என்று கருதுகிறேன். சேரன்மாதேவி மக்கள் இடிஅமீனைத்தான் மீண்டும் தேர்ந்தெடுப்போம் என்று முடிவு செய்தால் யார் தடுக்க முடியும்?

* உமார்த்தி, கோவை — 43.

? தாங்கள் வோட்டுப் போடத் தேர்ந் தெடுக்கும் நேரம் காலையா, மாலையா?

! காலைதான் சிறந்தது. மாலையில் போனல் அதற்குள் நம் வோட்டை வேறு யாராவது போட்டிருப்பார்களே!

* த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? அரசியலில் ஏராளமான நட்சத்திரங்கள் நுழைவது ஆரோக்கியமானதா? வரவேற் கத் தக்கதா?

! நட்சத்திரம் என்பதற்காக ஒதுக்க முடி யாது. நேர்மையும் உயர்ந்த நோக்கங்களும் உள்ளயாரும்அரசியலில்புகுவதைவரவேற்க லாம். ஆனல் 'நான் நடனமாடியே ஜெயிப் பேன்...' என்று சவால் விடும் தீபா மாதிரி யான நட்சத்திரங்கள் வருவது எப்படி ஆரோக்கியமானதாகவும் வரவேற்கத்தக்க தாகவும் இருக்க முடியும்?

* க. குமரேசன், திருவாரூர்.

? தங்கள் கையெழுத்தை நாங்கள் தெரிந்து கொள்ளலாமா?

! தாராளமாகத் தெரிந்து கொள்ளலாம்; புரிந்து கொள்ளத்தான் முடியாது.

* ந. வே. சுகவனம், சேலம் — 1.

? லாட்டரிச் சீட்டு வாங்குபவர்களைப் பற்றித் தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

! உழைப்பில் நம்பிக்கையுள்ள யாரும் இது போன்ற குறுக்கு வழிகளில் செல்ல மாட் டார்கள் என்பதே எனது கருத்து.

* ஆர். தேவேந்திரன், வேலூர்

? தமிழ்நாடு இ. காங்கிரஸ் தலைவர் மூப்ப னருடன் மத்திய அமைச்சர் ப. சிதம்பரமும் சென்று கவர்னரிடம் புகார் மனு கொடுத் தது பற்றித் தங்கள் கருத்து என்ன?

! இந்த விஷயத்தில் மு. க. வின் கருத்துத் தான் எனது கருத்தும்.

* ஸ்ரீமனேபாரதி, பாண்டிச்சேரி — 13.

? 'இன்றைய இளைய தலைமுறையினருக்கு சிவாஜியைத் தெரியாது' என்று திண்டி வனம் ராமமூர்த்தி கூறியிருப்பது எதைக் காட்டுகிறது?

! காங்கிரஸ்காரர்களுக்கும் பொது மக்க ளுக்கும் தொடர்பில்லாமலே இருந்து வந்தி ருப்பதைத்தான் இது உறுதிப்படுத்துகிறது.

* சி. தி. அரசு, சென்னை — 50.

? நான் ஒரு பத்திரிகைக்கு எழுதியனுப்பி ஞல் அது வேறொரு பத்திரிகையில் வெளி வருகிறது. இதற்கு என்ன காரணம்?

! சில சமயங்களில் சிலர் வெளியே 'ஆசி ரியர், கல்கி' என்று முகவரி எழுதியிருந் தாலும் உள்ளே 'குமுதம் ஆசிரியர் அவர் களுக்கு...' என்று எழுதியிருப்பதைப் பார்க் கிறேன். ஆக, இது அனுப்புநர்களிடமுள்ள குழப்பமும் பதற்றமும் தானே தவிர வேறில்லை.

* த. தனசேகரன், திருத்துறைப்பூண்டி.

? லாரியில் பொது மக்கள் பயணம் செய் வதைத் தடை செய்தால் என்ன?

! சட்டம் இருக்கிறது தடை செய்ய. இருப் பினும் தடை செய்யாததற்கான காரணம், பல பேருக்குத் தினத்துக்கு முப்பது நாற்பது ரூபாய் வருமானத்தோடு ஒருவேளைச் சாப் பாடும் கிடைக்காமல் போய் விடுமே என்ற அக்கறைதானே என்னவோ!

* ராஜேந்தர் பிரியன், திருச்சி — 3.

? 'தொழில் மலர்' என விளம்பரப்படுத்து கிறீர்களே, 'விடுமுறை மலர்' கிடையாதா, என்ன?

! நிச்சயமாக உண்டு. இதுபாட்டுக்கு இது; அது பாட்டுக்கு அது. இரண்டும் அடுத்தடுத் துப் பூக்கக் கூடாதா என்ன!

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

இந்துமதி பாலன்,
2/3, நடராஜர் நிலையம்,
சின்ன கோயில் தெரு,
பேரூர் (போஸ்டு),
கோவை — 641 010.

# கல்கி

ஏப்ரல் 17

# தில்லி தமிழர் சிறப்பிதழ்





புத்தாண்டுப் பரிசு!

## சுஜாதா

எழுதும்

# இருள் வரும் நேரம்

தொடர்கதை ஆரம்பமாகிறது

**அதிக பக்கங்கள் அதே விலை!**

தளபதி நிடமதி:

# கூவத்தின் கரைகளில் குங்குமப்பூ!

நிருபர்: ஒருவேளை வரும் தேர்தலில் நீங்கள் தோற்றுப் போய் உங்கள் வாழ்க்கை லட்சியமான முதல்வர் பதவி கிடைக்காமல் போயிட்டா...?

நிடமதி: கவலையே படாதீங்க; ஒரு டுடோரியல் காலேஜ் ஆரம்பிச்சாவது முதல்வர் ஆயிடுவேன்!

— நூர், மதுரை.

நிடமதி: எங்கள் கட்சி ஆட்சிக்கு வந்தால் குடியை ஒழிப்பது மட்டுமல்ல; குடியரசு தினம் கொண்டாடுகிற இழி நிலையை மாற்றி, மதுவிலக்கு தினம் என்று அதனை அறிவிப்போம்!

— வி. ஆனந்தராஜா, பெங்களூர்.

நிடமதி: கூவத்தை மணக்கச் செய்வோம்னு எதிர்க்கட்சிக்காரங்க பிரசாரம் பண்ணுறாங்க, தலைவரே!

தலைவர்: இதுக்கு ஏனய்யா கவலைப்படுறீங்க? அதுக்கு ஒருபடி மேலே போய், 'கூவத்தின் இரு கரைகளிலும் குங்குமப்பூ பயிர் செய்து கூவத்தை மணக்கச் செய்வோம்'னு நீங்க பதில் பிரசாரம் பண்ண வேண்டியதுதானே?

—கே. ஆர். சுப்பிரமணியன், டோம்பிவிலி.




நிடமதி: தலைவரே! இவருதான் மேஸ்திரி மன்னார்சாமி. எட்டு லாரி நிறையத் தொண்டர்களை நம்ம கடலூர் கூட்டத்துக்குக் கொண்டு வந்தார்...

தலைவர்: அப்படியே அவங்களை அடுத்தாப்பல பத்து ஊர்களில் நடக்க இருக்கும் பத்து கூட்டங்களுக்கும் வரச் சொல்லி ரேட் பேசி இப்பவே அட்வான்ஸ் குடுத்துடுய்யா. ஒவ்வொரு கூட்டத்துக்கும் தனித்தனியா ஆள் புடிக்கிறது பேஜாரா இருக்குது...!

— எஸ். தேவி, மதுரை.




நூர் எழுதிய இரண்டாவது துணுக்கு பிரசுரமாகிறது. அவருக்குப் பரிசும் இரட்டிப்பாகிறது. ரூ. 50/— பரிசு பெறுகிறார்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: ஜி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 137;
ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

